# கல்கி

ஸ்பீட்...ஸ்டைல்...ஸ்மார்ட்...



"விருதுகள் வேண்டாம்"

KALKI • 29.03.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



மதுரை மாவட்ட ஸ்பெஷல் - II

திருவாரூர், நாகை மாவட்ட வாசகர்களுக்கு நடுப்பக்கத்தில்

# கல்கி

29-03-2009

மதுரை மாவட்ட ஸ்பெஷல் - II

'மதுரை'யை எய்த்த 'திருவாரூர்'! 36

பர்ஸைப் பறிக்கும் பஸ் கட்டணம்! 50

ஜாலி அழகிரி! 54

கடல் தாண்டும் மல்லி 56

கலைநயம் மிக்க மண்டபங்கள் 60

வாசகர்கள் கவனத்துக்கு...
கலக்க வருதுப்பா கல்கி கூப்பன் இந்த ாரம் மட்டும் 34 - 35 பக்கங்களில்...



திரையில் பார்க்கிறீர்கள். ஆனால் அந்த வாழ்க்கையை நான் சினிமாவுக்காக நடிப்பதற்குக் கிடைத்தது ஒரே ஷெட்யூலில், வெறும் முப்பது நாட்கள்தான். ஒளிப்பதிவாளர் திரு, ஆர்ட் டைரக்டர் சாபுசிரில் இருவரது பணியும் அபாரமானவை. பர்சனலாக என் அனுபவத்தைச் சொல்ல வேண்டுமென்றால், நான் நடிக்க ஆரம்பித்தது முதல் இதுவரை கற்றுக் கொண்ட 'நடிப்பை' முதலில் மறந்துவிட்டு, அதன் பிறகு புதிய

# "விருதுகள் வேண்டாம்!"

ஒரு நெசவாளி தன் வாழ்நாள் முழுவதும் உழைத்து பல பட்டுப் புடைவைகளை நெய்தாலும், அவர் தன் மனைவிக்கோ, மகளுக்கோ ஒரு பட்டுப் புடைவை நெய்து தரவோ, வாங்கித் தரவோ முடியாத ஏழ்மை நிலையை அழுத்தமாகவும், நெகிழ்ச்சியூட்டும் விதத்திலும் சொல்லும் படம்தான் கஞ்சீவரம். பிரகாஷ்ராஜ் நெசவுத் தொழிலாளியாக நடிக்க, பிரபல இயக்குநர் ப்ரியதர்ஷன் இயக்கியுள்ள படம். திருவின் ஒளிப்பதிவும், சாபுசிரிலின் கலை இயக்கமும் படம் பார்ப்பவர்களை கதை நடக்கும் சுதந்திரத்துக்கு முந்தைய இந்தியாவுக்கே கொண்டு செல்கின்றன.

பிரகாஷ்ராஜின் மனைவியாக வரும் ஸ்ரேயா ரெட்டியின் நடிப்பு வெகு யதார்த்தம். சீரியசான படம் என்பதால் ஒட்டுக் காமெடி எதுவும் இல்லாமல், ஆங்காங்கே இயல்பான நகைச்சுவை வசனத் தெறிப்புகள் தியேட்டரைக் கலகலப்பாக்குகின்றன.

''ஒரு நெசவாளியினுடைய வாழ்க்கையின் இருபது வருடக் கதையை நீங்கள்

தொரு பரிமாண நடிப்பைக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. அது ஒரு புதுமையான அனுபவம். என்னையும் அறியாமலேயே ஒவ்வொரு நாளும் எனக்கு வயசாகிக் கொண்டிருந்தது. ஒருநாள் குடிசை செட்டுக்கு வெளியில் தரையில் பாய் போட்டு உட்கார்ந்து கொண்டிருந்தேன். எதிரே அழகான தொடுவானம். அந்தக் கட்டத்தில் படத்தின் பிளாஷ்பேக் காட்சிகள் எல்லாம் ஏதோ என்னுடைய சொந்த வாழ்க்கையில் என்றைக்கோ நடந்தது மாதிரி என் மனத்திரையில் மலரும் நினைவுகளாக ஓடின.''

**இந்தப் படத்துக்கு ஏற்கெனவே பல உலகப்பட விழாக்களில் பாராட்டுக்களும், விருதுகளும் கிடைத்துவிட்டன என்றாலும், உங்களுக்குச் சிறந்த நடிகர் விருது கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறீர்களா பிரகாஷ்?**

''இந்தப் படத்துக்கான அங்கீகாரங்கள் ஏற்கெனவே கிடைத்துவிட்டதாகத்தான் நான் நினைக்கிறேன். இதற்கு முன்பு மூன்று

முறை நேஷனல் அவார்டு வாங்கி இருக்கிறேன். அவை எல்லாம் அந்தந்த ஆண்டுகளில் வெளியான படங்களுக்குள் சிறந்த நடிப்பு என்பதற்காகத்தான் தரப்பட்டன. ஆனால் ஒரு நடிகன், சிறந்த நடிகன் என்பதைத் தொடர்ந்து நிரூபித்துக் கொண்டேயிருக்க வேண்டும். சிவாஜி, நாகேஷ், எஸ்.வி.ரங்கா ராவ் போன்றவர்கள் எல்லாம் நாற்பது வருடங்களுக்கு மேலாகத் தொடர்ந்து தங்களை யார் என்று நிரூபித்தார்கள். கமல்ஹாசனும் நாற்பது வருடங்களாகத் தம்மை நிரூபித்து வருகிறார். பத்துப் பதினைந்து ஆண்டுகளில் பிரகாஷ்ராஜ் அதைச் செய்துவிடுவது சாத்தியமில்லையே! என்னுடைய திறமையை வெளிப்படுத்தியதில் காஞ்சிவரத்துக்கும் ஒரு இடமுண்டு. மற்றபடி, இந்தப் படத்துக்காக எனக்கு விருது கிடைத்தால், அது காஞ்சிவரம் என்ற சிறந்த படத்தில் நானும் பணியாற்றியதற்காகக் கிடைத்த விருதாகவே இருக்கும்'' என்கிறார் பிரகாஷ்ராஜ்.

**- எஸ்.சந்திரமௌலி**



**— பிரகாஷ்ராஜ் பேட்டி**




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: சீதா ரவி

உதவி ஆசிரியர்: கதிர்பாரதி

வடிவமைப்பு: எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்

தொலைபேசி: 044 - 4343 8888 (30 lines)

தொலைநகல்: 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு: kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு: marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு: subscription@kalkiweekly.com

பிற தகவல்கள்: info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ. 3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

"எங்களை மூன்றாவது அணி என்று சொல்லாதீர்கள்; மாற்று அணி என்று சொல்லுங்கள்" என்று சீறுகிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியச் செயலாளர் டி.ராஜா. மூன்றாவது அணியை... ஸாரி... மாற்று அணியைக் கட்டமைப்பதில் பிஸியாக இருந்த ராஜாவிடம் பேசினோம்:

# வாய்ச்சவடால் வக்கற்ற

இந்திய மக்கள், கூட்டணி ஆட்சிக்குப் பழக்கப்பட்டு விட்டார்கள் என்பதை 1977 முதலே நாம் பார்த்து வருகிறோம். இந்த அடிப்படையில், காங்கிரஸ் மற்றும் மதவாத பா.ஜ.க. ஆகியவற்றுக்கு மாற்றாக, ஒரு அணியை அமைக்க வேண்டுமென்பது எங்களின் நீண்ட கால முயற்சி. அந்த முயற்சி யதார்த்த ரீதியில் பல கட்டங்களைத் தாண்டி வந்திருக்கிறது. இனி வரப் போகும் தேர்தலில் இந்தக் கட்சிகளுக்கு மாற்றாக ஒரு வலுவான அணி கட்டப்பட்டு வருகிறது. எங்களை மூன்றாவது அணி என்று சொல்லாதீர்கள். முதல் அணி என்றோ அல்லது இரண்டாம் அணி என்றோ சொல்லிக்கொள்ள காங்கிரஸுக்கும், மதவாத பா.ஜ.க.வுக்கும் என்ன தகுதி இருக்கிறது? இங்கு இருமுனை அரசியல் சக்திகள்தான் இருக்க முடியும் என்று அத்வானி சொல்வது அபத்தம். நமது நாட்டின் கலாசார வரலாற்றுப் பின்னணியில், பன்முகத் தன்மை கொண்ட நாட்டில், மக்களின் விருப்பங்களைப் பிரதிபலிக்கும் தகுதி பா.ஜ.க.வுக்குச் சிறிதும் கிடையாது. அதே போல சாமான்ய நிலமற்ற விவசாயிகளின் நலன்களுக்கு எதிராகச் செயல்படுவது காங்கிரஸ்.



நமது நாட்டுப் பாராளுமன்ற ஜனநாயகத்தில் கட்சி அடிப்படையில்தான் மக்களவைக்குத் தேர்தல் நடக்கிறது. இங்கு ஜனாதிபதி அல்லது பிரதமருக்கான நேரடித் தேர்தல் நடக்கவில்லை. எனவே பெரும்பான்மை பலம்பெறும் கட்சி அல்லது அணி, தேர்தலுக்குப் பிறகு பிரதமரைத் தேர்ந்தெடுப்பதில் எந்தத் தவறும் இல்லை. எங்களைப் பார்த்துக் கேள்வி கேட்கும் காங்கிரஸ், தங்களின் பிரதமர் வேட்பாளர் இன்னார்தான் என்று அறிவிக்குமா?

### குறைந்தபட்ச செயல்திட்டம்

தேசிய ஜனநாயக முன்னணி ஆகட்டும்; ஐக்கிய முற்போக்கு அணி ஆகட்டும்; தேர்தலுக்கு முன்பே, "நாங்கள் ஆட்சிக்கு வந்தால் இதுதான் எங்கள் செயல்



* அத்வானி



* சோனியா காந்தி

# பி.ஜே.பி.! காங்கிரஸ்!

## - சீறிப்பாயும் தோழர் ராஜா

திட்டம் என்று அறிவித்திருக்கிறார்களா? அது சாத்தியமாகாது. காங்கிரஸுக்கும், பா.ஜ.க.வுக்கும் மாற்றாக ஒரு ஆட்சியைக் கொண்டுவர இடதுசாரிகள் உட்பட பல்வேறு கட்சிகள் முனைந்திருக்கிறோம். ஆனால், எங்கள் கொள்கைகளில் சில முரண்பாடுகள் இருக்கக்கூடும். எனவே, தேர்தலுக்குப் பின் ஏற்படும் நிலையைப் பொறுத்து, ஆட்சி அமைக்கக் கிடைக்கும் வாய்ப்பைப் பொறுத்து மாற்று அணி குறைந்தபட்ச செயல்திட்டத்தை அறிவிக்கும். தேர்தலுக்குப் பிறகு எங்கள் அணியில் புதிய கட்சிகள் சேர வாய்ப்புண்டு.

### இடதுசாரிகளும் குற்றவாளிகளா?

நான்காண்டு காலம் காங்கிரஸை ஆதரித்த நீங்களும்தானே, அதன் மோசமான செயல்பாடுகளுக்குக் காரணம் என்கிறார்கள். நாங்கள் உடன் இருந்து அவர்களை வழிநடத்தியதால்தான் இன்று நிலவும் பயங்கரமான பொருளாதார வீழ்ச்சியில்கூட இந்தியா உறுதியாக நிற்கிறது. தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டம், தகவல் அறியும் உரிமைச் சட்டம் வந்ததற்கு எங்கள் நிர்ப்பந்தம்தான் காரணம். நாங்கள் மட்டும் இல்லையென்றால் காப்பீட்டுத் துறை அரசு நிறுவனங்கள், பல பொதுத் துறை நிறுவனங்கள், வங்கிகள் போன்றவை தனியார்மயம் ஆகியிருக்கும். இன்று நாடு தடுமாறிப் போயிருக்கும்.

### பயங்கரவாதம் ஒரு பிரச்னையா?

நிச்சயமாக. ஆனால், அதை ஒரு மதத்தோடும், இனத்தோடும் இணைத்துப் பார்க்கும் போக்கு இருக்கக்கூடாது. கடுமையான சட்டங்கள் இதற்குத் தீர்வாகாது. அரசியல் ரீதியான தீர்வுகளே பயங்கரவாதத்துக்கு முடிவு கட்டும். பயங்கரவாதத்தை ஒழித்து விடுவோம் என்று பா.ஜ.க. சொல்வது வாய்ச் சவடால். அந்தக் கட்சி ஆட்சியில் தானே பாராளுமன்றம் தாக்கப்பட்டது. இன்று உலக பயங்கரவாதப் பிரச்னைகளுக்குக் காரணம் அமெரிக்காதான். இந்த விஷயத்தில் ஆக்கபூர்வமான நடவடிக்கை எடுக்க முடியாமல் வக்கற்று இருக்கிறது காங்கிரஸ்.

**- ப்ரியன்**



# போலீஸ்

சரத்குமார் நடித்த நேதாஜி படத்தில் இயக்குநராக அறிமுகமாகி, கவிதை, நண்பனின் காதலி, தங்கம், தீ போன்ற படங்களை இயக்கியவர் ஜி.கிச்சா. திரைப்படக் கல்லூரியில் சினிமா பயின்ற இவர், வெற்றிகரமான தயாரிப்பாளராகவும், விநியோகஸ்தராகவும் இருக்கிறார்.

சமீபத்தில் வெளியாகி ஓடிக் கொண்டிருக்கும் தீ படத்தைத் தொடர்ந்து, சினேகா நடிக்கும் பவானி படத்தை இயக்குகிறார். விஜயசாந்தி நடித்த வைஜெயந்தி ஐ.பி.எஸ். படத்தின் ரீமேக் இது.

**நடிகை சினேகா புன்னகை அரசின்னு பெயர் வாங்கியவர். பவானி படத்தில் அவரை ஆக்ஷன் ஹீரோயினாக்கி இருக்கிறீர்களே?**

''சினேகா சிரிப்புக்குப் பெயர் போனவர் தான். அதே நேரம் அப்படிப்பட்ட பெண் ஆக்ரோஷமாக, கோபப்பட்டு நடிப்பது புதுசாக இருக்கும். அது மட்டுமல்ல, மென்மையான பெண் என்ற இமேஜ் கொண்ட சினேகா, முகத்தில் கோபம் காட்டி நடிக்கும் போது பவானி கேரக்டருக்கே ஓர் அழுத்தம் உண்டாகும். இதை எல்லாம் யோசித்துதான் சினேகாவை இந்த கேரக்டரில் நடிக்க வைத்திருக்கிறேன். நிச்சயமாக ஆடியன்ஸுக்கு பவானி படம் புது அனுபவமாக இருக்கும்.''

**நீங்கள் தயாரிப்பாளராகவும் இருப்பது, ஒரு இயக்குநராக உங்களுக்குப் பலமா? பலவீனமா?**

''நிச்சயமாக பலம்தான். ஒரு டைரக்டர் தன்னை புரொட்யூஸராக ஃபீல் பண்ணி

# டைரக்டர் கிச்சா

னால் தேவையில்லாமல் செலவு செய்ய மாட்டார். என் விஷயத்திலும் அதுதான் நடக்கிறது. நானே புரொட்யூஸராக இருப்பதால் எதுக்கு எவ்வளவு செலவு பண்ண வேண்டும் என்பது எனக்குத் தெரியும்.

**“நானே வினியோகஸ்தராகவும் இருப்பதால் ஆடியன்ஸின் விருப்பங்களைப் புரிந்துகொள்ள முடிகிறது.”**

அனாவசியமான செலவும் செய்ய மாட்டேன். அதே நேரம் இந்தக் காட்சிக்கு இவ்வளவு செலவு செய்துதான் ஆகவேண்டும் என்றால், அதில் ஒரு ரூபாய் கூட சிக்கனம் பிடிக்காமல் காட்சிக்குத் தேவையான செலவைச் செய்துவிடுவேன்.''

**நீங்கள் வினியோகஸ்தராகவும் இருக்கிறீர்களே?**

''நானே வினியோகஸ்தராகவும் இருப்பதால் ஆடியன்ஸின் விருப்பங்களைப் புரிந்து கொள்ள முடிகிறது. அதைக் கொண்டே கதைகளையும் காட்சிகளையும் தேர்ந்தெடுப்பதால்தான் என் படங்களை கமர்ஷியலாக வெற்றிபெற வைக்கவும் முடிகிறது.''

# கதைகள் ஏன்?

**சுந்தர்.சி.யை வைத்து இயக்கிய 'தீ' படத்தின் வெற்றியைப் பற்றி...**

''சுந்தர்.சி ஸாரை வித்தியாசமான கேரக்டரில் முழுக்க முழுக்க ஆக்ஷன் கேரக்டரில் நடிக்க வைக்கவேண்டும் என்று நினைத்தேன். அப்போதுதான் என் எதிர்பார்ப்புக்கு ஏற்ற மாதிரியே கிடைத்தது, ஆபரேஷன் துரியோதனா என்ற தெலுங்குப் படத்தின் கதை. எனவே அந்தப் படத்தின் ரீமேக் ரைட்ஸை வாங்கி தீ படத்தைப் பண்ணினோம். ரஜினி ஸார் படத்தின் டைட்டிலில் தரமான படத்தைக் கொடுத்திருக்கிறேன் என்ற திருப்தி இருக்கிறது எனக்கு.''

**தீ, பவானி, கள்ளன் என உங்கள் இயக்கத்தில் தொடர்ந்து போலீஸ் கதைகளாகவே அமைகின்றனவே?**

''தற்செயலாக நடந்ததுதான். அதே நேரம் சினிமாவில் இதுவும் ஃபார்முலாதானே? சின்ன வயதிலேயே திருடன் போலீஸ் கதை கேட்டு வளர்ந்தவர்கள்தானே நாம்? சினிமாவிலும் திருடன் போலீஸ் கதைகள்தான் பல்வேறு வடிவங்களில் சொல்லப்பட்டு வருகின்றன. ரெளடி, தாதா என்று சமீபகாலமாக திருடன் கதைகள் அதிகம் வந்து கொண்டிருக்கின்றன. என் படங்கள் போலீஸ் கதைகளாக புது டிரெண்டில் இருக்கின்றன. அதே நேரம் இனி பண்ணும் படங்கள் வித்தியாசமான கதைகளாக இருக்கும். என்னைப் பொறுத்த வரை எல்லா வகையான படங்களையும் கொடுக்கும் இயக்குநராக இருக்கவே விரும்புகிறேன்.''

– முத்துராமலிங்கம்

குலோப்ஜாமுன் மேல செர்ரி பழத்தை சொருகினாற் போல, வேடந்தாங்கலுக்குள் பூங்காவைப் புதுப்பிச்சா மாதிரி கல்லூரி வளாகத்துக்குள்ளேயே பழைமை வாய்ந்த அம்மன் கோயில். மாறுபட்ட அட்மாஸ்பியரில் சென்னையில் ஸ்ரீ கன்யகா பரமேஸ்வரி கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி. ஜாலி எலெக்ஷனுக்கு ஏற்பாடு செய்தபடி ஜாங்கிரி கணக்கா சுத்திக்கிட்டு இருந்தோம். ஒரு பக்கம் மனசை மயிலிறகால் தடவும் இளையராஜாவின் நத்திங் பட் விண்டும் இன்னொரு பக்கம் கவலையைக் குத்திக் கிழிக்கும் நாக்க மூக்க குத்தாட்டமும் என எதிரும் புதிருமான ஒத்திகைகள். பறவைகளின் கூச்சலை (அட பொண்ணுங்க பேச்சுதான்) மாணவிகளின் தலைவி சாரதி தெலுங்கில் மாட்லாடி அமைதியை சேஸ்த்தா உன்னித்தி (செஞ்சுக்கிட்டு இருந்தாங்க). சுடச்சுடப் பரிமாறப்பட்ட மொக்க ஜோக்குகளில் நம் எலெக்ஷன் டென்ஷன் ஐஸ்கட்டி போலக் கரைந்தே போனது. வெல்கம் - எலெக்ஷன் - ரிலாக்ஸ் டைம் - டிக்ளரேஷன் - இன்டர்வியூ என ஐந்து கட்டத்தில் அமர்க்களப்பட்டது கன்யகா காலேஜ் விசிட்...



# நத்திங் But யூத்





"இந்த கொலாஜ் டான்ஸ்ல நாக்கும் மூக்கும் ரிலாக்ஸாயிடும்."



என்னதான் கஷ்டப்பட்டு கால் ரன்னிங் ரேஸ்ல ஓடினாலும், பரிசு வாங்கப் போற தென்னவோ, கைதான். அறிவின் எல்லைக்கே போய் யோசிப்போமில்ல... (நீங்க வோட்டு போட்டு யாரோ பிரபலமாகற ஃபீலிங்ஸைத் தானே இப்படிக் காட்டறீங்க?!)

வீடு எரியறப்போ ஃபயர் ஸ்டேஷனுக்கு மிஸ்டு கால் கொடுக்கிற கஞ்ச புத்தியும், பண வீக்கத்தைக் கொறைக்க ரூபா நோட்டுல தைலத்தைத் தடவுற மந்த புத்தியும் இல்லாத மகராசனை செலக்ட் பண்றதுதான் ரொம்பக் கஷ்டம். மத்தபடி இந்த எலெக்ஷன் ஈஸிதான்.





## சக்ஸஸ் ஃபார்முலா



*நீங்க அழகா இருக்க என்ன காரணம்?*

மூளையில் ஐஸ் ஃபாக்டரி, பேச்சில் சுகர் ஃபாக்டரி, ஹார்ட்டுல ஸ்டீல் ஃபாக்டரி... இந்த மூணும் இருந்தா வாழ்க்கை எப்போதும் என்னை மாதிரி யூத் ஃபாக்டரியாக இருக்கும்.



# ரிலாக்ஸ் டைம்



"பாரதிராஜாவோட பொம்மலாட்டத்தை விட, சிம்புவோட சிலம்பாட்டத்தை விட, மனசுக்கு மருதாணி போடும் இந்தக் குத்தாட்டத்தில் நாங்க யோகாவை மிக்ஸ் பண்ணியிருக்கோம்."

(புதுசா இருக்கு!)

**உங்க ஸ்டைல் ஸ்டேட்மெண்ட் என்ன?**

"நடை, உடை, பாவனை மட்டுமில்ல... மனசும் ஆக்ஷனும் கூட ஸ்டைலாயிருக்கணும். ஸ்டைல் ஒரு மேக்னட் மாதிரி எல்லா இரும்பையும் இழுத்துக்கும். சேர்ந்த இரும்பையும் மேக்னட்டாக்கிடும். ஸ்டைல் மீன்ஸ் ஃப்ரஷ் திங்கிங்ன்னு யூத் கோனார்ல எழுதியிருக்கு."

- திவ்யா

(மிஸ் பிரபலமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்)

Ms.பிரபலம்

கல்லூரியின் முதல்வர் செல்வி. டி.வி. ஜெயலக்ஷ்மி அவர்கள் கூறுகையில்...

"எனது நாற்பத்தைந்து வருட கால ஆசிரியப் பணியில், கல்வி பல பரிமாணங்களை எடுத்துள்ளதை அனுபவபூர்வமாகப் பார்க்கிறேன். கல்வி ஒரு மனநிறைவுக்காகவும், சந்தோஷத்துக்காகவும் மட்டுமே அன்று இருந்தது. ஆனால், இன்று fast food கலாசாரத்தின் பிடியில் நாம் இருப்பதால், எல்லாவற்றிலுமே ஒரு கண்மூடித்தனமான வேகத்தைத்தான் பார்க்க முடிகிறது. கல்வி fast



'எண்ணி இடுக வோட்டு இட்டபின்
எண்ணுவது எங்கள் கடன்'னு புதுக்குறள் இயற்றிக் காட்டியவர் வோட்டு எண்ணிக்கைக்கு உதவியவர்.

(அடுத்த தடவையாவது வோட்டிங் மெஷின் கொண்டு வாங்கன்னு சொல்றீங்களே... அப்படி கொண்டு வந்தா இப்படி உங்களைக் கட்டம் கட்டி ஃபோட்டோ போட முடியுமா?)

இடைச்செருகல்

food போல நடத்தப்படக் கூடாது. எல்லாவற்றுக்குமே ஏன் எதற்கு என கேள்வி எழுப்பும் மனோபாவம் பெண்களிடம் வளர்ந்து வருவது ஒரு ஆரோக்கியமான விஷயம்.

கல்விக் கூடம் என்பது ஒரு கோயில். முன்னூறு வருட பழைமை வாய்ந்த ஸ்ரீ கன்யகா பரமேஸ்வரியின் கோயிலைக் கல்லூரியின் வளாகத்திலேயே பெற்றிருப்பதைப் பெரும் பாக்கியம் என்றே சொல்வோம். அனைத்துக் கல்லூரிகளுமே நவராத்திரி சமயத்தில் விடுமுறை அளித்து விடும் நேரத்தில், நாங்கள் கொலு வைத்து மிகச் சிறப்பான முறையில் நவராத்திரியைக் கொண்டாடி வருகிறோம்."

- நளினி சம்பத்குமார்



## "விடுமுறையையும் கொண்டாடுவோம்"

# கத்திரிப்பள்ளியில் மற்றொரு அணை கட்டினால் பூண்டி ஏரிக்கு நீர் வரத்துக் குறையும்!

# சென்னைக்குச்

**அறுபது லட்சம் மக்களின் குடிநீருக்கு ஆந்திரா வேட்டு வைக்கப் போவதாக அதிர்ச்சித் தகவல்கள் வெளியாகியிருக்கின்றன.**

சமீபத்தில் நடந்து முடிந்த சட்டமன்றத் தொடரில், ஆந்திரா எல்லையில் இருக்கும் பள்ளிப்பட்டு தொகுதியின் சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர் டாக்டர் இ.எஸ்.எஸ். ராமன், ''எண்பது கோடி ரூபாய் செலவில் அணைகட்டவிருக்கிறது ஆந்திரா. அதற்கான நிதியையும் ஒதுக்கியிருக்கிறது. உடனே தமிழக அரசு விழித்துக் கொண்டு இந்த முயற்சியைத் தடுக்கவில்லையென்றால் பள்ளிப்பட்டிலிருந்து சென்னை வரை இருக்கும் மக்களின் குடிநீர் ஆதாரம் பாதிக்கப்படும்'' என்று எச்சரித்தார்.

''ஆந்திரா அணைகட்டத் துவங்கவில்லை. நமது அனுமதியின்றி அவர்கள் அணை கட்ட முடியாது'' என்று பொதுப்பணித் துறை அமைச்சர் துரைமுருகன் ராமனுக்குப் பதில் சொன்னாலும், அண்டை மாநிலங்கள் நம்மை வஞ்சிப்பதற்குச் சிறிதும் தயங்காதவை

சென்னைக்கு வடக்கே ஆந்திர மாநில நகரி மலைத் தொடர்களில் உருவாகிறது கொசஸ்தலை ஆறு. சுமார் 50 கி.மீ., பயணம் செய்து சென்னை அருகே பழவேற்காட்டில் கடலில் கலக்கிறது. வடகிழக்குப் பருவ மழையின் போது (அக்டோபர் - டிசம்பர்) மழைப் பிடிப்புப் பகுதிகளில் பெய்யும் மழை மொத்தமும், கொசஸ்தலை ஆற்றின் வழியாகச் சென்றுதான் கடலில் கலக்கும். இந்த ஆற்றிலிருந்து நேரடியாக, தமிழ்நாட்டில் விவசாயத்துக்குத் தண்ணீர் எடுக்கப்படுவதில்லை. ஆனால், வெள்ளப் போக்கு ஏற்படுத்தும் நிலத்தடி நீர் ஆதாரத்தால், வழியெங்கும் உள்ள ஊர்களுக்கு இந்த ஆற்றுப் படுகையில் ஆழ்குழாய் போட்டுத் தண்ணீர் எடுக்கப்பட்டு குடிநீர் விநியோகிக்கப்படுகிறது.

சென்னை நகர குடிநீர் விநியோகத்தை மேம்படுத்த, இந்த ஆற்றின் குறுக்கே, 1944ல், பூண்டியில் அணைகட்டப்பட்டது. வெள்ளத்தின்போது இங்கு தேக்கப்படும் நீர், புழலேரி வழியாகச் சென்னைக்கு விநியோகிக்கப்படுகிறது. 1971ல், ஆறு துவங்கும் இடமான ஆந்திராவில் உள்ள அம்மனப்பள்ளி என்ற இடத்தில் அணை ஒன்றைக் கட்டியது ஆந்திர அரசு. அதில் தேக்கி வைக்கப்படும் தண்ணீர் மூலம் 4000 ஏக்கர் பாசன வசதியை உண்டாக்கிக்



● துரைமுருகன்



● இ.எஸ்.எஸ்.ராமன்

# குடிநீர் ஆபத்து?

கொண்டார்கள். இந்த அணை கட்டிய பிறகு முன்பு போல் கொசஸ்தலையில் வெள்ளப் பெருக்கு ஏற்படுவதில்லை என்று பொருமிக் கொண்டிருந்தார்கள் அந்தப் பகுதி மக்கள். இந்த நிலையில் எண்பது கோடி செலவில் பள்ளிப்பட்டுக்கு மூன்று கி.மீ. தொலைவில் ஆந்திர எல்லைக்குள் கத்திரிபள்ளி என்ற இடத்தில் ஆற்றின் குறுக்கே மற்றொரு அணை கட்டுவதற்கான முயற்சிகளை மேற்கொண்டது ஆந்திரா.

கத்திரிபள்ளியில் மற்றொரு அணையைக் கட்டினால் கண்டிப்பாக பூண்டி ஏரிக்கு நீர் வரத்து மிகவும் குறைந்துவிடும். இதில் ஆறுதலான விஷயம் என்னவென்றால், அணைகட்டப்படுவதற்கு கத்திரிப்பள்ளி மக்கள் எதிர்ப்பு தெரிவித்ததால் தற்காலிகமாக அணை வேலைகள் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன. இருந்தாலும் ஆந்திர மாநில நீர்ப் பாசனத் துறை அதிகாரிகள் மற்றும் பொறியாளர்கள் இந்த அணையைக் கட்டியே தீருவது என்று பிடிவாதமாக இருக்கிறார்கள்.

ஆந்திர அரசு அணைகட்ட மதிப்பீடு தயாரித்து கள ஆய்வு மேற்கொண்டது என்று துரைமுருகன் சட்டசபையில் சொல்லியிருக்கிறார். "நாம் பெருந்தன்மையாக பரம்பிக்குளம் அணைக்கட்டில் இருந்து கேரளாவுக்கு பாசனத்துக்குத் தண்ணீர் கொடுக்கிறோம். ஆனால், நமது பூகோள அமைப்பு காரணமாக, அண்டை மாநிலங்கள் நம்மை வஞ்சிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறோம். கொசஸ் தலை ஆற்றில் மற்றொரு அணை துவக்கினால், அதைத் தடுக்க பேச்சுவார்த்தை மூலமோ அல்லது சட்டப்படியோ உரிய நடவடிக்கை எடுக்கப்படும்'' என்று சொல்கிறார் துரை முருகன்.

''இதுபோன்ற ஆற்றுநீர் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ள தென்மாநில முதல்வர்கள் கூட்டமைப்பு இருக்க வேணடும். 1982ல் மகாராஷ்டிரா, ஆந்திரா, கர்நாடகா மாநில அரசுகள் இணைந்துதான் சென்னைக்கு கிருஷ்ணா நதிநீர் கொடுக்க ஒப்புக்கொண்டன. சார்க் நாடுகள் கூட்டமைப்பு போல தென்னக முதல்வர்கள் கூட்டமைப்பு இருந்தால், உச்சநீதி மன்றம், தீர்ப்பாயங்கள் என்று அலைந்து திரியாமல், அதன் மூலமாகவே பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ள முடியும்'' என்பது ராமன் கூறும் தீர்வு.

- ஸ்ரீநி



# கல்கி



2009 மார்ச் 29
ஸர்வதாரி பங்குனி 16
மலர் : 67
இதழ் : 35

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## கலக்கம் உண்டாக்கும் தேர்தல்களம்!

தேர்தல் சூடுபிடிப்பதற்கு முன்பாகவே பிரச்னைகள் சூடுபிடித்து விட்டன! வருண் காந்தி மீது மதவெறித் தூண்டுதல் குற்றச்சாட்டு பதிவாகியிருக்கிறது. மூன்றாவது அணி அமைத்து மூன்று நாட்களாவதற்குள் மாயாவதி அதிலிருந்து வெளியேறி, தனியாகப் போட்டியிடப் போவதாக அறிவித்துவிட்டார்! அவருக்குப் பிரதமர் பதவி மீது ஒரு கண்; அதனால் அப்படி முடிவெடுத்தார் எனில், ஜெயலலிதா அதே நோக்கத்துடன் மூன்றாவது அணியில் அங்கம் வகிக்க முன்வந்திருக்கிறார். பா.ஜ.க.வில் அருண் ஜேட்லிக்கும் ராஜ்நாத் சிங்குக்கும் ஒத்துப்போகவில்லை; ஏற்கெனவே கோலோச்சிய பல்வேறு மாநிலங்களிலும் அக்கட்சி பின்னடைவையே சந்திக்கிறது! காங்கிரஸோ, மாநிலத்துக்கு மாநிலம் பிரதேசக் கட்சிகளுடன் ஒப்பந்தம் போட்டுக் கொண்டு முதுகு சவாரி செய்யத்தான் முனைகிறது! பிரதேசக் கட்சிகளோ, இதுதான் சந்தர்ப்பம் என்று தங்கள் நிபந்தனைகளுக்குக் காங்கிரஸைப் பணிய வைக்கின்றன. பீஹாரிலும் உ.பி.யிலும் அக்கட்சிக்குத் தேர்தலுக்கு முன்பாகவே பலத்த அடி! தமிழ்நாட்டிலோ, விடுதலைச் சிறுத்தை கட்சியினரின் புலிகள் ஆதரவுப் பேச்சுக்காக அவர்கள் மீது நடவடிக்கை எடுத்த முதல்வர், தி.மு.க. தலைவர் என்கிற முறையில் அக்கட்சியை ஏற்று, கூட்டணியில் சேர்த்துக் கொள்கிறார்! பா.ம.க. மற்றும் விஜயகாந்தின் நிலைப்பாடு இன்னும் தெளிவாகவில்லை. காங்கிரஸ் இவர்களது 'நல்ல பதிலுக்கு'த்

சட்டி சுட்டுடுச்சு
கை விட்டுடுச்சு
மதத்துவேஷ பேச்சு
வருண் காந்தி




தவமிருக்கிறது! மொத்தத்தில், தேசியக் கட்சிகள், மாநிலக் கட்சிகள் நிலைக்குத் தேய்ந்து போவதும் மாநிலக் கட்சிகள் மத்திய அரசின் உருவாக்கத்தைத் தாங்கள்தான் நிர்ணயிக்கப் போவதாக மார்தட்டுவதுமான ஓர் அவலச் சூழல் நிலவுகிறது.

ஒரு தேர்தல் முடிந்து, மறுதேர்தல் அறிவிக்கப்படும் இடைவெளியில், தங்கள் கட்சிகளை எல்லா மாநிலங்களிலும் பலப்படுத்திக் கொள்வதற்கு தேசியக் கட்சிகள் எவ்வகையிலும் முனைவதில்லை. தேர்தல் நெருங்கிவிட்டதால், அப்பணிகளைக் கவனிப்பதற்காக மத்திய அமைச்சர் ஜெய்ராம் ரமேஷ் (காங்கிரஸ்) ராஜினாமா செய்வது மட்டும் எப்படி உதவும்?! அல்லது 'ஜெய்ஹோ' கோஷம் வெற்றி பெற்றுத் தந்துவிடுமா? தமிழ்நாட்டில் இதுநாள்வரை காங்கிரஸ் வளர என்ன செய்யப்பட்டது? "ஆட்சிக்கு வந்தால் ஆறு மாதத்தில் இலங்கைப் பிரச்னையைத் தீர்ப்போம்" என்று முழங்கும் பா.ஜ.க., தமிழகத்தில் என்ன வளர்ச்சி கண்டுள்ளது?

இவ்வாறு இருந்தால், மக்களுக்குத் தேர்தலில் வாக்களிக்கும் ஆர்வமே குறைந்து போகும். பதவிக்கு வரும் புதிய அரசு, மக்கள் பிரதிநிதித்துவ அரசாக அமையாமலே போய்விடக்கூடும்!

குடியாட்சியில் நம்பிக்கை கொண்ட எந்த தேசத்துக்கும் இருகட்சி ஜனநாயகம்தான் ஏற்றது. ஆனால், அதை நடைமுறைப்படுத்துவதற்குக் கூட அரசியல் முதிர்ச்சியும் தீர்க்கதரிசனமும் வேண்டும். இன்றைய நம் தலைவர்களிடம் அது இல்லை என்பதே சோகமான உண்மை. நல்லாட்சி, தேசநலன் என்பதைக் காட்டிலும் ஆட்சியைப் பிடித்து பதவிக்கால ஆதாயங்களை அனுபவிப்பதிலேயே அவர்கள் குறியாக இருக்கிறார்கள்!

பொருளாதார வளர்ச்சி கண்டு வரும் இந்தியாவில், வலுவான அரசியல் தலைமை இல்லாது போனால், சீரிய வழிகாட்டல் இன்றி மக்களின் உழைப்பு வீணாகும். உலகின் மிகப் பெரிய ஜனநாயகமாக நம் நாடு இருந்தால் போதாது. மிகச் சிறந்த ஜனநாயகமாகவும் அது திகழ வேண்டும். அதற்கு உட்கட்சி ஜனநாயகம் வளர்வதுடன் தேர்தல் சீர்திருத்தங்களும் அவசியமாகும்.

# சாக்லேட் ஃபேக்டரி!










**மகாகவி அல்லாமா இக்பால் - 'ஜெயம்' ஹுஸைன், சமநிலைச் சமுதாயம் பதிப்பகம், 5, கிரீம்ஸ் சாலை, சென்னை-6. விலை ரூ.120/-**

பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளின் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த புகழ்பெற்ற கவிஞர் இக்பாலின் வாழ்க்கைக் குறிப்புகள். கேட்கும்போதே பெருமிதம் தரும் 'ஸாரே ஜஹான்ஸே அச்சா'- இவரது பாடல்தான். 'இக்பால் யார்?' என்ற தலைப்பில் 1957ல் ஆசிரியர் எழுதிய நூலின் புதிய பதிப்பாகும் இது. இக்பாலின் வாழ்க்கைப் பயணத்தை வாசித்துச் செல்கையில், ஆங்காங்கே அவரது கவிதைத் தூறல்களிலும் நனைந்து திளைக்கலாம்.

**சார்லி மற்றும் சாக்லேட் ஃபேக்டரி! - ரோல்தால், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 2. விலை ரூ.95/-**

சாக்லேட் மேல் பிரியம் கொண்ட சார்லிக்கும், இன்னும் நான்கு சிறுவர்களுக்கும் ஒரு சாக்லேட் ஃபேக்டரியைச் சுற்றிப் பார்ப்பதற்கான வாய்ப்பு கிடைக்கிறது. அந்த வாய்ப்பு எவ்வாறு கிடைக்கின்றது? அதற்கு முன்னும் பின்னும் நடக்கும் லூட்டிகள்- இவற்றைச் சுற்றிக் கதை பின்னப்பட்டிருக்கிறது. பாஸ்கர் சக்தி தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். குழந்தை நாட்களை நினைவூட்டிப் புத்துணர்வு கொள்ள, நாமும் சார்லியோடு ஒரு சுற்று சுற்றிவிட்டு வரலாம் சாக்லேட் ஃபேக்டரியை!

**நைபர்ஹுட் ஹெல்த் கைட், டாக்டர் ஆர்.சந்திரசேகரன், புதிய எண் 16, 2வது குறுக்குத் தெரு, ஆர்.ஏ.புரம், சென்னை - 28.**

அண்ணாமலைபுரச் சுற்றுவட்டாரத்தில் இருக்கிற மருத்துவமனைகள், மருத்துவர்கள் என்று ஒரு பட்டியல். என்ன சாப்பிடலாம், என்ன சாப்பிடக் கூடாது, உடல் பருமன், டயபடீஸ் பிரச்னைகள், ஓரல் போலியோ, கான்சர், சாதா தலைவலி, டெங்கு காய்ச்சல், காலை வாக், பிளட் பாங்க், ஆம்புலன்ஸ், கிட்னி செக்-அப், ஹார்ட் செக்-அப் என்று ஏராளமான தகவல்களைப் புரிந்து கொள்கிற வகையில் டாக்டர் ஆர்.சந்திரசேகரன் எழுதித் தயாரித்திருக்கிறார் - இந்த ஹெல்த் கைடில்.

கார்ட்டூனிஸ்ட் பிள்ளை சிரிக்க வைக்கிற மாதிரி நிறையப் படம் எல்லாம் போட்டிருக்கிறார்.

கைடு கண்ணில் படுகிற மாதிரி வைப்பது உங்கள் பொறுப்பு!

புத்தகத்துக்கு விலை எதுவும் வைக்கவில்லை. ஆமாம், இலவசம்!

- நேயமுகில்

# எளிய வாழ்வு

அந்தக் காலத்தில் வசதியுள்ளவர்கள் எட்டு அடுக்கு வீடு கட்டிக் கொண்டதில்லை. எல்லாருடைய வீடும் ஏறக்குறைய ஒரே மாதிரிதான் இருக்கும். நம்முடைய சில்பம் முதலிய சாஸ்திரங்களின் பெருமை தெரிவதற்காக ராஜாக்கள், மந்திரிகள் பெரிய மாளிகை கட்டிக் கொண்டிருந்தார்கள். வைசியர்களும் பெரிய வீடுகள் வைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் பொது ஜனங்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருந்த பிராமணர்கள் சிறுகக் கட்டிப் பெருக வாழ்ந்தவர்கள்தான். எல்லா விஷயத்திலும் அவர்கள் எளிமையாக இருக்க வேண்டும் என்பதுதான் சாஸ்திரவிதி. அரண்மனை எல்லாவற்றுக்கும் மேலாகக் கோயில்தான் ஊருக்கே பெரிய வீடு; கோயில் ஸ்வாமிக்குத்தான் நகை நட்டு, ஆபரணம் எல்லாம். உத்ஸவம்தான் ஊருக்கெல்லாம் கல்யாணம் மாதிரி. தனி மனிதர்களின் டின்னர், டீ பார்ட்டி, ஆடம்பரம் எதுவும் அப்போது கிடையாது. வசதியுடையவர்கள் எளிமையாக வாழ்ந்த வரையில் மற்றவர்களுக்கும் இவர்களிடம் துவேஷம் இல்லை; பிற்பாடு வேதரக்ஷணத்தையும், கிராமத்தையும் விட்டு அவர்கள் பட்டணத்துக்கு வந்து பண வேட்டையில் விழுந்ததும்தான் சமூகத்தின் சௌஜன்யமே சீர்குலைந்து விட்டது. பழைய எளிய வாழ்க்கை முறைக்குத் திரும்ப எல்லாரும் பிரயாசைப்பட வேண்டும். காந்தி இருந்தவரைக்கும், 'எளிய வாழ்க்கை, எளிய வாழ்க்கை' (Simple living) என்ற பேச்சாவது இருந்தது. இப்போது அந்த அபிப்பிராயமே போய்விட்டது. மறுபடி அந்த முறைக்கு மக்களைக் கொஞ்சத்தில் கொஞ்சமாவது திருப்ப வேண்டும். நிறைவு மனசில்தான் இருக்கிறது என்று உணர்ந்து, அவரவரும் கடமையைச் செய்து கொண்டு எளிமையாக இருக்க வேண்டும்.



– ஜகத்குரு காஞ்சிகாமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

தமிழ்நாடு முஸ்லிம் முன்னேற்றக் கழகம் 'மனித நேய மக்கள் கட்சி' என்ற அரசியல் கட்சியாக மாறியதற்குக் காரணம் தி.மு.க. கூட்டணியில் ஓரிரு இடங்களைக் கேட்டுப் பெறுவதற்காகத்தான். ஆனால், கலைஞரின் சட்டை பாக்கெட்டில் ஏற்கெனவே இந்தியன் யூனியன் முஸ்லிம் லீக் இருக்கிறது. இந்த நிலையில் மற்றொரு முஸ்லிம் அமைப்பான 'மனித நேயம்' என்ன செய்யும்?

''கலைஞர் எங்களோடும் நெருக்கமாகத்தான் இருக்கிறார். இஸ்லாமிய மக்களிடையே எங்களுக்குத்தான் செல்வாக்கு உண்டு.

* ஜவாஹிருல்லா (மனித நேயம்)



நாங்கள் ராமநாதபுரம், மயிலாடுதுறை, வேலூர், தஞ்சாவூர் தொகுதிகளைக் கேட்போம். எங்களுக்கு இதயத்தில்தான் இடம் என்றால், தனித்தே மூன்று தொகுதிகளில் போட்டி போடத் தயங்க மாட்டோம்'' என்று சொல்கிறார்கள் மனித நேயப் பிரமுகர்கள்.

இறுதியில் சமத்துவ மக்கள் கட்சிக்கு பா.ஜ.க.வை விட்டால் வேறு வழியில்லை என்றாகிவிட்டது; அல்லது பா.ஜ.க.வுக்கு சரத்குமார்தான் தோள் கொடுக்க வேண்டும். இந்த நிலையில் தொகுதிப் பங்கீட்டில் சரத்குமார் கன்னியாகுமரியைக் கேட்டுவிட்டால் என்னாவது என்ற பயத்தில் பா.ஜ.க. பிரமுகர் பொன்.ராதாகிருஷ்ணன், தன்னை உடனடியாக அந்தத் தொகுதிக்கு வேட்பாளராக அறிவிக்க வேண்டும் என்று அழுத்தம் கொடுக்க,



* சரத் (சமக)

# ஸீட் கிடைக்குமா

அத்வானியும் அறிவித்து விட்டார். இப்போது சரத்குமார் திருநெல்வேலி, தூத்துக்குடி தொகுதிகளைக் கொடுத்துவிட வேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். பா.ஜ.க.வுக்கு நோ சான்ஸ், பணிந்தே ஆகவேண்டும். திருநெல்வேலியில் சரத்குமாரே களம் இறங்கக் கூடும்.

தொகுதி மறுசீரமைப்பில் கரூர் தொகுதியில் விராலிமலை, வேடச்சந்தூர் போன்ற சட்டசபைத் தொகுதிகள் புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்போது தி.மு.க. சார்பில் கே.சி.பழனிச்சாமி பாராளுமன்ற உறுப்பினர். ஆனால், இவருக்கும் மாவட்டச் செயலாளர் வாசுகி முருகேசனுக்கும் ஏழாம் பொருத்தம். ''கே.சி.பழனிச்சாமி ம.தி.மு.க.வுக்குப் போய் வந்தவர். தி.மு.க.வில் இருந்தாலும் வைகோவுக்கு இன்னமும் நெருக்கமாக இருப்பவர். சென்ற முறை ஏதோ அதிர்ஷ்டத்தில் ஸீட் வாங்கிவிட்டார். இந்த முறை விடமாட்டோம்'' என்கிறார்கள் வாசுகி முருகேசனின் ஆதரவாளர்கள். இந்தச் சந்தடிச் சாக்கில் கவிஞர் சல்மா தொகுதியைப் பெற்று விடுவதில் மும்முரமாக இருக்கிறார்.

தமிழ்நாடு காங்கிரஸில் தி.மு.க.வுடன்

# ஸீட்!

தொகுதிப் பங்கீடு பற்றிப் பேச அமைக்கப்பட்டிருக்கும் குழுவில் ஐந்து பேர் இருக்கிறார்கள். இதில் வாசனும், சுதர்சனமும் தி.மு.க.வுடன் நல்ல தோழமையில் இருக்கிறார்கள். எனவே அவர்கள் ஆதரவாளர்களுக்கு வேண்டிய தொகுதிகளைப் பெற தி.மு.க. ஒத்துழைக்கும். இளங்கோவன் குறித்து தி.மு.க.வுக்கு அதிருப்தி இருந்தாலும் அவருக்கு ஸீட் கொடுப்பதற்கு தி.மு.க. ஓ.கே செய்துவிடும். சிதம்பரம் தனது தனிப்பட்ட செல்வாக்கு காரணமாக அவருடைய இரண்டு ஆதரவாளர்களுக்கும் ஸீட் வாங்குவார் என்கிறார்கள். இந்த நிலையில் தங்கபாலுவின் ஆதரவாளர்கள் கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறார்கள்.


■ ஜி.கே.வாசன் (காங்கிரஸ்)


■ கே.சி.பழனிச்சாமி (தி.மு.க)

- ஸ்ரீநி

# காய்க்காத

## 11

அப்பா நட்டுவெச்ச
அஞ்சாறு தென்னையிலே
ஒரே ஒரு மரம் மட்டும்
காய்க்காமல் போயிட்டுது
மலட்டுமரமென்று
மரமேறி சொல்லிவிட்டான்.

ஒல்லிமரமெல்லாம் ஓயாமல்
காய்க்கையிலே
ஒடஞ்ச மரமெல்லாம் உச்சிபோய்
காய்க்கையிலே
குள்ள மரமெல்லாம் குலைகுலையாய்க்
காய்க்கையிலே
இந்த மரம் மட்டும் ஏனப்பா மலடு
என்போம்

அப்பா -
காய்க்கும் பார் ஒருநாள் என்று
கவனிப்பார் தன்வேலை.
தினம்தோறும் மரம்பார்த்துப்
புலம்புவது எங்க வேலை.

காய்க்காத மரத்தைத்தான் அப்பா
கரிசனமா கவனிப்பார்
நாற்காலி போட்டு அங்கே
நாளெல்லாம் வீற்றிருப்பார்.

அப்பா செத்த அன்று
அவருக்குப் பாடை செய்ய
காய்க்காத மரம்பாத்து
தென்னைஓலை வெட்டுனாங்க.

அப்பாவைக் குளிப்பாட்டி
ஓலைமேல் படுக்க வச்சி
தூக்குனப்போ கவனிச்சேன் -
ஓலைகளின் இடைவெளியில்
செவ்விளநீர்க் காய்போல
தெரிகிறது அவர் மண்டை.
செவ்விளநீர்க்காய் சுமந்து
போகுதுங்க தென்னமட்ட.
காய்க்காத மரம் இப்போ
காய்ச்சிடுச்சு அப்பாவால்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:**
மனக்கவலைகள் தீரும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிட்டும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். வேலையில் இருந்து வந்த தொல்லை கள் படிப்படியாக விலகும். சனீஸ்வர பகவானுக்கு எள்ளு முடித்து சனிக் கிழமைதோறும் தீபம் ஏற்றி வரவும்.

**ரிஷபம்:** திடீர்ப் பிரயாணம் செய்ய நேரிடும். பணவசதிகள் பெருகும். கடன் தொல்லை தீரும். எதிர்ப்புகள் விலகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். ஆஞ்சநேயர் ஸ்வாமியை வழிபட்டு வர நற்பலன் சித்திக்கும்.

**மிதுனம்:**
வேலையில் இருந்து வந்த மனபயம் விலகும். உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்படும். கடன் தொல்லை தீரும். வழக்கு முடிவுக்கு வரும். வியாபாரத்தில் இருந்து வந்த மந்தநிலை தீரும். வியாழக்கிழமைதோறும் ராகவேந்திர ஸ்வாமியை வழிபடுவது நலம் தரும்.

**கடகம்:**
சுபகாரியம் கூடி வரும். வருமானம் பெருகும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தை பாக்கியம் ஏற்படும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி உண்டாகும். வாக்கு வன்மை மேலோங்கிடும். கடன் சுமை தீரும். சனிக்கிழமைதோறும் ஆஞ்ச நேயர் சுவாமிக்கு துளசி மாலை சாற்றி வழிபட்டு வரவும்.

**சிம்மம்:**
உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். மனப்பிரமை தீரும். எதிரிகளால் தொல்லை ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மனக்கசப்புகள் விலகும். வியாழக்கிழமைதோறும் தட்சிணாமூர்த்தி சுவாமிக்கு நெய் தீபம் ஏற்றி வர சங்கடங்கள் விலகும்.

**கன்னி:** செலவுகள் சுபமானதாக இருக்கும். சுபநிகழ்ச்சிகள் கைகூடி வரும். குழந்தை களால் சந்தோஷம் உண்டாகும். சத்ரு தொல்லை நீங்கும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். நீண்ட கால கடன் தொல்லை தீரும். சனிக்கிழமைதோறும் காக்கைக்கு எள்ளுசாதம் போட்டு வர நற்பலன் கிட்டும்.

**துலாம்:**
மனத்துக்கு இனிய சம்பவங்கள் நடக்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். தொழில்துறையில் அபரிமிதமான லாபம் கிட்டும். இல்லற வாழ்வு மகிழ்ச்சிகரமாக இருக்கும். நீண்ட கால வழக்கு முடிவுக்கு வரும். வியாழன்தோறும் குருபகவானை வழிபட்டு தீபம் ஏற்றிவர நற்பலன் அதிகரிக்கும்.

**விருச்சிகம்:**
ஆடை ஆபரண அலங்காரப் பொருட் கள் வாங்குவீர்கள். கடன் தொல்லை தீரும். குழந்தைகளால் மனசந்தோஷம் கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. பணவசதி பெருகும். சனிக்கிழமைதோறும் ஐயப்பன் வழிபாடு செய்து வர நற்பலன் கைகூடும்.

## தஞ்சை பரத்வாஜ்

**தனுசு:**

குடும்ப வாழ்வில் இருந்து வந்த துயரம் நீங்கும். வீட்டில் மகிழ்ச்சிகரமான சம்பவங்கள் நடக்கும். வராத நிலுவைகள் வசூலாகும். நல்லவர் உதவி கிட்டும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். ராகு/ கேது பகவானுக்கு தீபம் ஏற்றி, பூ வைத்து வழிபாடு செய்து வர நலம் கிட்டும்.

**மகரம்:** இந்த வாரம் நற்பலன் நிறைந்திருக்கும். மனஉளைச்சல் தீரும். வேலைப் பளு குறையும். எதிர்ப்புகள் விலகிப் போகும். உடல்நிலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வியாபாரத்தில் இருந்து வந்த மந்தநிலை சரியாகும். ஆஞ்சநேயர், குருபகவானுக்கு பூ வைத்து வழிபாடு செய்து வர நற்பலன் சித்திக்கும்.

**கும்பம்:**

கடன் தொல்லை குறைந்து தலைச்சுமையைக் குறைக்கும். அப்பாடி ஒருவழியாக வெளியே வந்து விட்டோம் எனத் தோன்றும். தடை நீங்கி, திருமணம் கைகூடும். சனிக் கிழமைதோறும் மறவாது சனீஸ் வரனுக்கு தீபம் ஏற்ற, பூர்வ ஜென்ம பலன்கள் கைகொடுக் கும்.

**மீனம்:**

என்ன ஏதோ புதுசா கதை சொல்றோம்னு நினைக்காதீங்க. நீங்க நினைத்தது நடக்கப் போகிறது. நீண்ட நாள் எதிர் பார்த்த காரியம் சக்ஸஸ் ஆகும். விலகிப் போன உறவு திரும்ப வந்து ஒட்டிக்கப் போகுது. கல்வி வளத்தால் புதிய சாதனை படைப் பீங்க. வேலையில் உங்களுக்கு பிரமோஷன் காத்திருக்கு. மனசுல டபுள் சந்தோஷம் ஏற் படப் போகுது. கவலையை விடுங்க.

**22.03.09 முதல்**
**28.03.09 வரை**

# 10 காற்று வரும் பருவம்

**கோ**விந்து நல்ல தூக்கத்தில் இருந்தான். ஆழ்ந்த தூக்கம். கதவு தட்டும் ஓசை. ஏதோ கனவு மாதிரி இருந்தது. 'தட்' 'தட்' 'தட்' என்று விட்டு விட்டு அந்த ஓசை கேட்டது. இப்படி ரொம்ப நேரமாக அந்த ஓசை கேட்டுக் கொண்டிருக்கிறது. தூக்க மிதப்பில் இருந்து விடுபடவில்லை. சட்டென்று அந்த ஓசை பேரோசையாகிற்று. விழிப்பு வந்துவிட்டது. இன்னும் கரண்ட் வரவில்லை.

கதவைத் திறந்தான். வாசலில் ஜெயபால் அண்ணன். ''அவுங்களைக் காணோம்?'' என்றான். ''அக்கா வீட்டுக்குப் போயிருக்காங்க. காலம்பெற வருவாங்க.'' கோவிந்து மற்றொரு மெழுகை ஏற்றிச் சுவர்க் கடிகாரம் பார்த்தான். இரண்டரை! ''கலாட்டான்னாங்க'' என்று அண்ணன் பக்கம் திரும்பினான். அவன் உருவம் சுவரில் பிருமாண்டமாகத் தெரிந்தது. சற்றுத் தள்ளி இவன் நிழல். ''ம் கோடாங்கிபட்டியிலெ தானாம். மீனாட்சிபுரத்துலெயும் கலவரம் தானாம்'' என்றான். ''பஸ்ஸெல்லாம்?'' ''போலீஸ் வந்தாச்சு! எங்கிட்டோ கத்தி விட்டான். போடி விளக்கு கிட்டவெல்லாம் பஸ்ஸே போக முடியலெயாம். நல்ல வேளை, அம்மாவும், அப்பாவும் அப்படியே அக்கா வீட்டுக்குப் போயிட்டாங்க'' என்று கூறிக் கொண்டே பாயைச் சுருட்டி எடுத்துக் கொண்டே மாடி அறைக்குப் போய்விட்டது! இந்த இருட்டுக்குள் இங்கே படுத்தால் என்ன? அதுக்கு அங்கு போனால் தான் தூக்கம் வரும்!

கோவிந்துக்கு அதன் பின் தூக்கம் பிடிக்கவில்லை. இருளைப் பார்த்துக் கொண்டே படுத்துக் கிடந்தான்.

''சேவாலு...''

''.............''

''ஐயா சேவாலு''

கோவிந்து விழித்தான். ஏதேதோ நினைத்துக்கொண்டே அசந்துவிட்டான். அந்தக் குரலை எங்கோ கேட்ட மாதிரி இருந்தது. பனிக்காற்றில் குரல் கமறி விட்டது. அண்ணன் மாடியில் இருந்து இறங்கி வந்தது. சட்டை பட்டனைப் பூட்டிக் கொண்டே கதவைத் திறந்தது. மீசை மாயாண்டித் தேவர் நின்றிருந்தார். இன்னும் சரியாக விடியவில்லை. இந்த நேரத்தில் இவர் ஏன் அண்ணனைத் தேடி வரவேண்டும்? அன்று சந்தையில் இவருடன் அண்ணனைப் பார்த்ததுமே திடுக்கென்றது. மீசை மாயாண்டித் தேவர் கொஞ்சம் துடுக்கான ஆள். அரட்டல் உருட்டல் ஜாஸ்தி. இருவரும் தெருவில் இறங்கி வாய்க்கால் பாலத்துப் பக்கம் நடப்பது தெரிந்தது. கோவிந்துக்கு ஏனோ மனம் திக்கென்று இருந்தது!

**அ**ம்மாவும், ஐயாவும் வந்து விட்டார்கள். போன காரியம் திருப்தியாக இருந்திருக்கும்போல. ஐயா சந்தோஷமாக இருந்தார். அம்மாவிடமும் அது தெரிந்தது.

''போன காரியம் என்ன ஆச்சு?'' என்றான் அம்மாவைப் பார்த்து.

''பொண்ணு நல்லா இருக்கு. கலகலப்பா பேசுது. நல்ல சேப்பாத்தேன் இருக்கு. பாக்க அப்புராணியாத்தேன் தெரியுது!''

''ம்.''

''மொத்தம் மூணு பேராம். மூத்ததும் பொண்ணு. அத செக்காணுரணிலெ தாய் மாமனுக்கே கொடுத்திருக்காம். ரெண்டாவது ஒரு பையன். ஒன்னைய கெணக்கா




இருக்குது. அடுத்தது இந்தப் பொண்ணு!''

''அவுக என்னா சொன்னாக?''

''அவுகளுக்கு இஷ்டம்தேன். என்னா எதிர்பார்க்குறீக, எங்களால உண்டானவெல்லாம் செய்ய முடியாதுன்னாக. உங்கய்யா சொன்னார். ஒங்க பொண்ண அனுப்பி வெச்சா போதும். வேற என்ன செய்யச் சொல்லப் போறோம்னார்.''

''அண்ணனுக்குப் புடிச்சிருக்கா?''

''பொம்பள கெணக்கா தலையைக் குனிஞ்சுக்கிட்டே கெடந்தான். அவுக சின்னய்யாதேன் நல்லா நிமிந்து பாருங்கன்னார். அப்புறம் உங்க மாமா வெளிய கூட்

டிட்டுப் போய் கேட்டாராம். புடிச்சிருக்குன்னானாம்.''

**கோ**விந்துவுக்கு சந்தோஷம். அன்று முழுவதும் மனசு குதிபோட்டது. சந்தோஷத்தின் எல்லை விரிந்துகொண்டே போனது. இப்படி ஏதாவது ஒன்று மனசுக்குள் புகுந்து கொண்டால் அதன் துள்ளலுக்கு அளவேது? இன்று வயலுக்குப் போக வேண்டாம். எங்கும் அலையவேண்டாம். முடியை வெட்டலாம். ஆற்றில் குளித்துவிட்டுத் திரும்பலாம்.

சாமியப்பன் ஒருவர்தான். அந்த ஒரு கையை நம்பித்தான் ஒரு தலைமுறையே உட்கார்ந்து இருக்கு. சாமியப்பனுக்கு அறுபது இருக்கும். அவருக்கு இரண்டு மகன்கள். அவர்கள் இளவட்டங்களைப் பிடித்து விட்டார்கள். இளவட்டங்களுக்கு சாமியப்பனைக் கண்டால் ஆகவே ஆகாது. மண்டையக் கொடுக்க மாட்டார்கள். 'கரும்பிட்டான்' 'மாடு மேஞ்சாப்புலே பண்ணிட்டான்' 'ஒலம்படியை கவுந்தின மாதிரி பண்ணிப்பிட்டான்' என்று அழுகும். ஒன்றோடு ஒன்று கேலிப் பேச்சிலும் கிண்டல் பேச்சிலும் நக்கல் நையாண்டியிலும் சாமியப்பன் பேர் உருளும். சாமியப்பன் மகன்கள் ராமுவும் லட்சுமணனும் எப்படியோ இளவட்டங்களைக் கவர்ந்து விட்டனர். கோவிந்து ராமு இருக்கும் அரச மரத்துக்குப் போனான். அங்கு ஏழு எட்டுத் தலைகள் காத்திருந்தன. கோவிந்துவும் போய் நின்று கொண்டான்.

கோவிந்து வீட்டில் வருஷக் கூலிதான். ஐயாவுக்கும், இவனுக்கும், ஜெயபாலுக்கும் எல்லோருக்கும் வருஷம் முழுவதுவும் முடிவெட்டி, முகச்சவரம் செய்துவிட வேண்டும். கருதறுப்பு சமயம் களத்துமேட்டுக்கு வந்து, அளந்து போடும் நெல்லை வாங்கிக் கொண்டு போக வேண்டும். போடுகிற நெல்லை வாங்கிக் கொண்டு நகரமாட்டார்கள். ஒருமணியோ, ரெண்டு மணியோ காத்திருப்பார்கள். தலையைச் சொறிந்துகொண்டே உட்கார்ந்திருப்பார்கள். கடைசியாக இரண்டு கை நெல்லை வாரிப் போட்ட பின்பு கும்பிட்டுவிட்டு நகர்வார்கள். கொஞ்ச நேரத்தில் அவர்கள் குடும்பத்தில் இருந்து 'பொம்பளை ஆள்' வரும். 'இப்பத்தான அவே வாங்கிட்டுப் போறான்' என்பார்கள். கையில் ஒரு சின்ன ஈயச் சட்டை இருக்கும். இரவில் சோற்றுக்குத் தூக்கிக் கொண்டு வரும் சட்டி. அல்லது சேலை முந்தானையை அகல விரித்துக் குனிவார்கள். 'ஏலெ அவளுக்கு ரெண்டு கை அள்ளிப் போடுடா' என்பார்கள். 'சாமீ அந்தக் கருக்கா நெல்லைக் கூட்டி அள்ளிக் கிடுதேன்' என்று கெஞ்சுவார்கள். கடைசியில் எப்படியோ அதைச் சாதித்து விடுவார்கள். இதே போல் துணி வெளுக்கிறவர்களும் வருவார்கள்.

''சின்னய்யா, சித்த அப்படி ஒக்காருங்க. இதோ ஐயாவுக்கு முடிச்சதும் வாரேன்'' என்று கோவிந்துவைப் பார்த்தான் ராமு.

''ஆகட்டும்.''

அவருக்கு முடித்துவிட்டு, பிற்பாடு கோவிந்துவைக் கூப்பிட்டான். கோவிந்து சட்டையைக் கழட்டி மரக் கொம்பில் தொங்கவிட்டு, ராமு முன்னாடி உட்கார்ந்தான். ராமு தண்ணீரை மாற்றி கிண்ணத்தில் ஊற்றினான். ''சேவாலு ஐயாவுக்கு ரெண்டு நாளைக்கு முன்னாடி வெட்டிவுட்டேன். மீசை, கிருதாவெல்லாம் 'சைசு' பண்ணி விட்டேன். சும்மா ஜம்முனு இருந்தாரு.''

கோவிந்துவுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

**மகாத்மா காந்தியின் நினைவாக இந்தியாவில் முதன்முதலாக அமைக்கப்பட்ட காந்தி அருங்காட்சியகம் மதுரை தல்லாகுளம் பகுதியில் உள்ளது. சபர்மதி ஆஸ்ரமம் போல குடிலும், சமாதியும், காந்தி உபயோகித்த பொருட்களும் அவரைப் பற்றிய அரிய புகைப்படங்களும் இங்கே இருப்பது சிறப்பு. தமுக்கம்**

**மைதானம், ராஜாஜி பூங்கா, முருகன் கோயில் எதிரிலேயே உள்ளன. ஜாலியாக பூங்காவில் உலாவலாம், காந்தி மியூஸியத்தைத் தரிசித்து விட்டு. காந்தி அருங்காட்சியகத்தின் திறந்த வெளி அரங்கில் அடிக்கடி கலைநிகழ்ச்சிகளும் நடக்கின்றன. மதுரையின் சிறப்பில் காந்தி மியூஸியத்துக்குத் தனி இடம் உண்டு.**

**- இரா. கல்யாணசுந்தரம், மதுரை**



''பொண்ணு கின்னு பாக்குறீகளாய்யா?'' என்றார். கோவிந்து 'ம்' என்றான். ''காலா காலத்துலெ முடிச்சாத்தானே?''

''ஊருக்குள்ளே ஒரே தல பொறட்டா வுலெ கெடக்கு. நம்ம மீச மாயாண்டி ஐயா கம்பு சுத்துறேன் கத்தி சுத்துறேன்னு ஒரு கூட்டத்தச் சேத்துக்கிட்டுத் திரியுறார். நம்ம சேவாலு ஐயாவும் அதுலெ இருக்காரு போல. சூதானமா இருந்துகிறனும்'' என்றான். கோவிந்துக்கு அது சங்கடமாக இருந்தது. மேற்கொண்டு அது என்ன ஏது என்று விசாரிக்கலாமா? வேண்டாமா? என்று நினைத்தான். ஆனால், ராமுவும் பேச்சு தாவிவிட்டது.

**கோ**விந்து குளிக்க ஆற்றுக்குக் கிளம்பினான். புளியந்தோப்பைக் கடந்து, வாய்க்கால் மேட்டில் ஏறியிருப்பான். எதிரே நாகு. கோவிந்துவுக்குச் சந்தோஷம். ''எங்க போயிருந்த கோவிந்து. ஒங்க வீட்டுக்கு வந்தேன்'' நாகு குளித்து துவைத்துத் திரும்பியிருந்தான். ''முடிவெட்டலாம்னு போனேன்.'' நாகு துவைத்த சட்டையைக் காற்றில் ஆட்டினான். இடுப்பில் ஈரவேட்டி. தோளில் ஜட்டி பனியன் முறுக்கிக் கிடந்தது. ''சரி. போ. குளிச்சுட்டு வர்றேன்'' நாகுவுக்கு கோவிந்தைப் பிரிய மனமில்லை. ''ரொம்ப நேரம் ஆகுமா?'' என்றான். ''துணிய அலசிட்டு குளிக்க வேண்டியது தேன்'' என்றவுடன், ''சரி வா போவலாம்'' என்று அவன் கூடவே திரும்பினான்.

நாகு மணலில் இறங்கி உட்கார்ந்தான். கோவிந்து துணிகளை அலசினான். ஆற்றில் நீர் குறைந்துவிட்டது. பக்கத்தில் ஒரு மாந்தோப்பு. எத்தனை முறை குளித்தாலும், எத்தனை முறை இந்த மணலில் நடந்தாலும் சலிப்பே வராது. கோவிந்து துணியை அலசி, நாணல் புதரில் காயப் போட வந்தான்.

வந்தவன் அப்படியே நின்றுவிட்டான். அவன் கண்ட காட்சியில் அப்படியே திகைத்துப் போனான். நாணல் புதரை ஒட்டி ஒரு ஓடை. வெள்ளோடை என்று பெயர். பகம்புல்லும் கோரைப்புல்லும் பூத்துக் கிடக்கும் ஓடை. ஓடை இறக்கத்தில் ஒரு புல்வெளி. அந்தச் சிறுவெளிப் பரப்பில்தான் அந்தக் காட்சி. காட்சியா அது! கண்றாவி! கொத்துக்காரர் சம்சாரம் 'குட்டிப் புள்ள' காட்டாமணக்கு செடியில் சரிந்து உட்கார்ந்து இருக்கிறாள். அவளுக்கு எதிரில் அவன். அவன் என்றால் வடக்குத் தெரு வண்டிச் சுப்பையா மவன். பாளையம் காலேஜில் படிக்கிறவன். அமைதியாக ஆத்துப் பக்கம் போகலாம் என்று புத்தகத்தைத் தூக்கிக் கொண்டு வந்திருப்பான் போல. இவள் எப்படி விழுந்தாள்? அவன் எப்படித் தொட்டான் என்று தெரியவில்லை.

முகத்துக்கு நேராக முகத்தை வைத்துக் கொண்டு கிடக்கின்றன. அந்தக் காட்சியைப் பார்த்தும் கோவிந்துக்குப் பகீரென்று

கைகால் எல்லாம் நடுக்கம் கொடுத்து விட்டது. திகைத்த முகம் பார்த்து, நாகு, ''என்ன? என்ன?'' என்றான். கோவிந்துக்குப் பதில் கூடச் சொல்ல முடியவில்லை. புருவம் உயர்த்தி அந்தத் திசையைக் காட்டினான். கால் நடுக்கம் தணியவில்லை. நாகு புதருக்குள் ஓடினான். ஓடியவன் மண்டி போட்டு உட்கார்ந்து கொண்டு அந்தக் காட்சியைப் பருகினான்.

கோபம்தான் மிஞ்சிற்று அவனுக்கு.

''அநியாயமா இருக்கு கோவிந்து!''

''ம்.''

''அவ, கொத்துக்காரன் பொண்

ஒன்னு புரிஞ்சுக்க கோவிந்து. அவ கல்யாணம் ஆனவ. புருஷன் இருக்கான்.



டாட்டிதானே?''

''ம்.''

''புல்லறுக்கப் போறேனுட்டு வந்திருப்பா. அவன் படிக்கிற லட்சணம் பாத்தியா? ஊருக்குள்ள தெரிஞ்சா அம்புட்டுத்தான். அசிங்கமாப் போயிடும் அசிங்கமா... வெட்டுப் பலின்னு ஆயிடும்...''

''எனக்கு ஒண்ணும் சொல்ல முடியலெ நாகு. குத்த உணர்வுதான் எனக்கும்.''

''அவ கல்யாணம் ஆனவ.''

''இருக்கட்டும்.''

''அவளைவிட அவனுக்கு ஏழு எட்டு வயசு கொறைவாத்தேன் இருக்கட்டும்.''

''இருக்கட்டும். எப்படியோ ஒண்ணோட ஒண்ணு சேந்திட்டது. சேரணும்னு தோணிட்டா எதுவும் தெரியாது.''

''ஒடம்பு கொழுப்பு இது.''

''அப்படினா என்னையும் அப்படித்தான் சொல்லுவாங்க...''

''இது திருட்டுத்தனமில்லெ?''

''நானும் அப்படித்தானே?''

''ஒன்னு புரிஞ்சுக்க கோவிந்து. அவ கல்யாணம் ஆனவ. புருஷன் இருக்கான். அவன் படிக்கிறவன். சின்ன வயசு. நான் ஜாதியக் கூட விட்டுட்டேன்.''

கோவிந்துவுக்கு அப்படி அதை உதறிவிட முடியவில்லை. கொத்துக்காரன் பொண்டாட்டியை அவனுக்கு நன்றாகத் தெரியும். சிரித்துச் சிரித்துப் பேசுவாள். மிகவும் நெருங்கி வந்துதான் பேசுவாள். அப்படிப் பேசுவதால் மட்டும் அவள் 'நடுங்கமாக' இருப்பவள் என்று முடிவு செய்துவிட முடியுமா? 'கொழுந்தனாரே... கொழுந்தனாரே?' என்று வாய்க்கு வாய் கூப்பிடுவாள். எத்தனை களைத்து வந்தாலும் அவளுக்கு அலங்காரம் மட்டும் குலையக்கூடாது. அந்த அண்ணன் நேர் எதிர். இந்த மதினிக்கு தோள் பட்டை உயரம்தான் அவர். சேறும் சகதியுமான பழுப்பேறிப் போன நாலு முழ வேட்டி. எங்காவது ஓடிக் கொண்டேதான் இருப்பார்.

இருவரும் பேசிக் கொண்டே கரையேறினர். அந்த எருமை ஓடை மேட்டில் ஏறி வயலுக்கு வந்துவிட்டது. பச்சைப் பசேல் என்ற பயிரில் வாய் வைத்து விட்டது. இதுவும் ஒருவர் கண்ணிலும் விழவில்லை. நாகு துணி காய்ந்துவிட்டது. சட்டையைப் போட்டுக் கொண்டான். கோவிந்து ஈரத் துணிகளை காற்றாடவிட்டுக் கொண்டே நடந்தான். வரப்புகளைக் கடந்து வாய்க்கால் மேட்டில் ஏறினர். அப்போது வயல்காரன் எங்கிருந்தோ ஓடிவந்தான். பயிரை மேயும் எருமையைப் பார்த்துவிட்டான். கோவிந்துவும் நாகுவும் சட்டென்று திரும்பிப் பார்த்தனர். கோவிந்துக்கு பயம்.

**(காற்று வீசும்)**

# டாக்டர் சுதா சேஷய்யன் பாராட்டுகிறார்

"அன்னை அன்பர்களுக்கும் அன்னைக்கும் இடையே உள்ள உறவுப் பாலம் என்ன
என்பதை மிக அழகாக விளக்கும் பாடல்கள்"

# 'ஸ்ரீ அன்னையின் பெருமை'

**ஒலிப் பேழை, 6 பாடல்கள்**

பாடல்களை இயற்றியவர்

**கலைமாமணி விக்கிரமன்**

**ராஜலட்சுமி விக்கிரமன்**

மெட்டமைத்துப் பாடியவர்

**டாக்டர் ஆர். அபிராமசுந்தரி**

இசை அமைத்தவர்:

**திரு. அச்சுத்ராமன்**

6 பாடல்கள் அடங்கிய குறுந்தகடு நன்கொடை ரூ.99. தபாலில் பெற

ரூ. 20. டிராப்ட் அல்லது மணிஆர்டர் மூலம் அனுப்பவும்.

(இந்தத் தொகை ஸ்ரீ அரவிந்த பாரதி அறக்கட்டளைக்குச் சேரும்)

**வெளியீடு**

**ஸ்ரீ அரவிந்தபாரதி அறக்கட்டளை**

3 ஜெயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம்,

சென்னை - 600 033. தொலைபேசி: 044-23712485

---



## பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியருக்கு

# யுவஸ்ரீ கலா பாரதி விருது

தமிழ்நாடு, பாண்டிச்சேரி மற்றும் பெங்களூரைச் சார்ந்த பள்ளி கல்லூரி மாணவ,
மாணவியருக்கு மதுரை பாரதி யுவ கேந்திரா அமைப்பு சார்பில் **யுவஸ்ரீகலா பாரதி**
**விருது** மற்றும் **சுவாமி விவேகானந்தர் விருதுகள்** வழங்கப்படுகின்றன. நடந்து
முடிந்த மற்றும் கடந்த 3 ஆண்டுகளில் 10, 12 ஆம் வகுப்பு பொதுத்தேர்வுகளில் 80
**சதவிகிதம் மற்றும் அதற்குமேல் மதிப்பெண் பெற்றவர்கள் இதற்கு விண்ணப்பிக்கலாம்.**
மேலும் LKG முதல் கல்லூரி வரையிலான மாணவ, மாணவியர் படிப்பு, இசை,
பரதநாட்டியம், விளையாட்டு, ஓவியம், யோகா, UC MAS, ABACUS, மற்றும் பிற
துறைகளில் பரிசு பெற்றவர்களும், அவர்கள் பெற்ற பரிசுக்கான சான்றிதழின் ஜெராக்ஸ்
பிரதிகளுடன் ரூ. 10 அஞ்சல் தலை ஒட்டப்பட்ட சுய விலாசமிட்ட கவருடன் கீழ்கண்ட
முகவரிக்கு உடன் அனுப்பிட கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். நிகழ்ச்சி அந்தந்த
மாவட்டத்தில் நடைபெறும். தேதி, இடம் ஆகியன அவரவர்களுக்கு
அனுப்பிவைக்கப்படும். விழாவின் போது ஒவ்வொருவருக்கும் எடுக்கப்படுகிற
புகைப்படத்திற்கான கட்டணத்தை ஒவ்வொருவரும் கண்டிப்பாக ஏற்க வேண்டும்.




**அரிமா நெல்லை பாலு,**

**நிறுவனர்-பாரதி யுவ கேந்திரா,**

**G-52, சாந்தி சதன் குடியிருப்பு, கோச்சடை,**

**மதுரை-625 016. செல் 94439-30815, 94426 30815.**

பூங்கோதை மீண்டும் அமைச்சராகி விட்டார். இப்போது, 'மதிப்பு'மிக்க தகவல் தொழில்நுட்பத் துறை கொடுக்கப்பட்டி ருக்கிறது. என்ன காரணங்களுக்காக ராஜினாமா செய்தாரோ அந்தக் காரணங் கள் இப்போது அர்த்தமற்றதாகப் போய் விட்டனவா! முதல்வர் கருணாநிதி மக்களுக்கு விளக்க வேண்டும்.

**நடந்தது என்ன?:** சென்ற வருடம் ஏப்ரல் மாதம் டெக்கான் கிரானிகல் ஆங்கில தினசரியில் ''தலைமைச் செய லாளரின் தொலைபேசி ஒட்டுக் கேட் கப்படுகிறது'' என்ற தலைப்பில் அவருக் கும் ஊழல் கண்காணிப்பு - தடுப்பு இயக்குனர் உபாத்யாயாவுக்கும் நடந்த உரையாடல் வெளியிடப்பட்டிருந்தது. ஜெயலலிதா மீதுள்ள சில வழக்குகளை விரைவுபடுத்த வேண்டியதன் அவசியத் தைக் குறித்த உரையாடல் அது. எதிர்க் கட்சிகள் கொதித்தெழுந்தன. ஓய்வுபெற்ற நீதிபதி பி.சண்முகம் தலைமையில் விசார ணைக் கமிஷனை அமைத்து விட்டார் முதல்வர்.

**சூடேற்றிய சுவாமி :** இதற்குள் சுப்பிர மணியம் சுவாமி ஒரு சி.டி.யைப் பத்திரி கையாளர்களிடம் வெளியிட்டு புயலைக் கிளப்பினார். அந்த சி.டி. உரையாடலில் 'ஜவஹர் என் உறவினர்' என்று வெளிப் படையாகவே சொல்லி ஜவஹர் மீதுள்ள வழக்கு விவகாரங்களை உபாத்யாயாவிடம் கேட்டார் அமைச்சர் பூங்கோதை. அந்த உறவினர் ஊழல் வழக்கில் மாட்டிக் கொண்டு, விசாரணையில் இருப்பவர். இந்த உரையாடல் பத்திரிகைகளில் வெளி யானதும் ஆடிப்போன கலைஞர், ராஜி னாமா கடிதத்தைக் கேட்டுப் பெற்றார். ''தவறான நோக்கத்துடன் நான் இயக்கு னரிடம் பேசவில்லை. ஆனாலும் பேசியது தவறுதான்'' என்று அமைச்சர் முதல்வருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

**கலைஞர் செய்த தவறு:** தலைமைச் செயலாளரிடம் உபாத்யாயா பேசிய உரையாட லைக் குறித்து ஆய்வு செய்வதை மட்டுமே நீதிபதி சண்முகத்தின் விசாரணை வரம்புக்கு உட்படுத்தி

# பூங்கோதைக்கு

யிருந்தது தமிழக அரசு. அதுவும் உபாத்யாயா பெயரைக் குறிப்பிடாமல் 'ஒரு முதுநிலை அதிகாரி' என்று அரசு ஆணையில் குறிப்பிட்டிருந்தார்கள். அதே உபாத்யாயாவிடம்தான் அமைச்சரும் பேசியிருக்கிறார். எனவே, விசாரணை வரம்பில் பூங்கோதையின் விவகாரமும் இடம் பெற்றிருக்க வேண்டும். அதைச் செய்யாததன் மூலம் நீதிபதியின் விசாரணை துவக்கத்திலேயே பிசுபிசுத்துப் போய் விட்டது. விசாரணைக் கமிஷன் பூங்கோதையையும், சுவாமியையும் விசாரித்திருக்க வேண்டும்.



கே.எஸ்.ஆர்.

**கமிஷன் முடிவு!**

தலைமைச் செயலாளர் உரையாடலை காவல்துறை ஒட்டுக் கேட்கவில்லை என்றும், உபாத்யாயா அதை தமது லேப்டாப்பில் பதிவு செய்திருந்தார் என்றும், அந்த உரையாடல் ஊழியர் சங்கர் என்பவர் மூலமாக மீடியா கைகளுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டது என்றும் சொல்லியிருந்தார் நீதிபதி. தொடர் நடவடிக்கையாக, உபாத்யாயா இடைநீக்கம் செய்யப்பட்டார். அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. சங்கர் மீது குற்றப்பிரிவில் வழக்கு பதிவுசெய்யப்பட்டிருக்கிறது. மற்றும் ஊழியர்கள் பிரபாகரன், விஜயராஜன் என்பவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

**கண்துடைப்பு:** ''சென்ற வருடம் ஜனவரி மாதம் அரசு தொலைபேசிகளை ஒட்டுக்கேட்பதாகச் செய்தி வந்தது. என் செல்போன் நம்பரும் ஒட்டுக் கேட்கப்படுவதாக பத்திரிகையில் போட்டிருந்தார்கள். இது தொடர்பாக தலைமைச் செயலாளருக்குக் கடிதம் எழுதினேன். பின்னர் தலைமைச் செயலாளர், பூங்கோதை உரையாடல்கள் வெளிவந்த பிறகு, விசாரணைக் கமிஷன் அமைக்கப்பட்டதல்லவா. அப்போது நீதிபதிக்கு 'என்னையும் சேர்த்து விசாரிக்க வேண்டும்' என்று கடிதம் எழுதியிருந்தேன். பதிலில்லை. மொத்த விசாரணையும் கண்துடைப்பு. ஊழல் செய்த ஒரு நபருக்கு அமைச்சர் சிபாரிசு செய்திருக்கிறார். சாதாரணமாக அமைச்சர்கள் ஒரு விஷயம் குறித்து விவரம் கேட்டாலே, அதிகாரிகளுக்குப் 'புரிந்து'விடும். அதிலும் 'உறவினருக்காகப் பேசுகிறேன்' என்று அமைச்சர் சொன்னால் என்ன அர்த்தம்? தார்மிக அடிப்படையில் அவரை மீண்டும் அமைச்சராக நியமித்தது தவறு. ஆனால் தேர்தல் வருவதால், அமைச்சரின் இனத்தைச் சேர்ந்தவர்களின் ஆதரவைப் பெறுவதற்காக மீண்டும் அமைச்சராக நியமித்திருக்கிறார் முதல்வர். இது தவறான முன்னுதாரணம்'' என்கிறார் ம.தி.மு.க. தலைமை நிலைய செயலாளர் கே.எஸ்.ராதாகிருஷ்ணன்.

துரதிர்ஷ்டவசமாக, தவறான நெறிமுறைகள் அல்லவா இங்கே வழிகாட்டுதல்களாக ஆகிவருகின்றன!

**- கௌசி**

# ஏன் பூங்கொத்து?






# 19–ஐ தொட்டுவிட்டோம்

## மேலும் முன்னேறிச் செல்வதற்காக...

19 வருடங்களாக உலகத் தரமுள்ள சிகிச்சையை அனைவருக்கும் எட்டும் வகையில் அளித்து வருகிறோம்



தேசிய தரத்திற்கான விருது (தங்க மயில் விருது) நிறுவனர் தலைவர் டாக்டர். N.சேதுராமன் அவர்கள், அப்போதைய நுகர்வோர் மற்றும் பொது விநியோக மத்திய மந்திரி திரு. சரத்பவார் அவர்களிடமிருந்து விருதினைப் பெற்றுக் கொள்கிறார்.



டாக்டர் S.குருசங்கர், துணைத் தலைவர் அவர்கள், 2007ம் வருடத்திற்கான சிறந்த சமுதாய பொறுப்புணர்வு செயல்பாட்டிற்கான GE - MODERN MEDICARE-ன் உன்னத விருதினை மும்பையில் நடைபெற்ற விழாவில் பெற்றுக்கொள்கிறார்.

### சிறப்பு சிகிச்சைப் பிரிவுகள்

- 24 மணிநேர விபத்து சிகிச்சைப் பிரிவு
- ஆண்மையின்மைக்கு நவீன சிகிச்சைப் பிரிவு
- இருதய அறுவை சிகிச்சை
- சர்க்கரை நோய் சிகிச்சை
- கல்லீரல், குடல், இரைப்பை அறுவை சிகிச்சை
- குழந்தையின்மைக்கு சிறப்பு சிகிச்சைப் பிரிவு
- சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை
- நரம்பியல் மருத்துவம்
- புற்றுநோய் சிறப்பு சிகிச்சைப் பிரிவு
- எலும்பு, மூட்டு & முதுகுத் தண்டுவட சிகிச்சை



**மீனாட்சி மிஷன் மருத்துவமனை**

(Run by S.R. Trust)

மதுரை.

Ph: 0452 - 426 3000

www.meenakshimission.org


மதுரை மாவட்ட ஸ்பெஷல்!
கல்கி
29.03.2009
மதுரை
மாவட்டச் செய்திகள்:
சீதாரவி, கதிர்பாரதி,
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரச

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 18.4.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**

**திருவாரூர், நாகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்



47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32




**மதுரை தன் பழைய சிறப்புகளைப் போதிய அளவு வளர்க்கவுமில்லை; புதிய சிறப்புகளைப் பெற்று வளரவுமில்லை.**

**காரணங்கள் என்ன? மதுரை நாடாளுமன்ற உறுப்பினரான மோகன் [கம்யூனிஸ்ட் மார்க்சிஸ்ட்] சொல்கிறார் :**

''இந்திய சுதந்திரத்துக்கு முன்னரும் சரி, பின்னரும் சரி, மதுரை மாவட்ட வளர்ச்சிக்குக் காரணம் தனியார் முயற்சி தான். அரசின் ஈடுபாடு மிகக் குறைவே'' என்று ஆரம்பித்தார் மோகன். ''தமிழ் நாட்டின் எந்த ஒரு கனரகத் தொழிற்சாலைத் திட்டமும் மதுரைக்குத் தரப்படவில்லை; அது இன்றி இங்கே தொழில் வளம் எப்படிப் பெருகும்?

மத்திய அரசுதான் கண்டு கொள்ளவில்லை. தற்போதைய மாநில அரசு எத்தனையோ வெளிநாட்டுத் தனியார் நிறுவன முதலீடுகளுக்குப் புரிந்துணர்வு ஒப்பந்தம் போடுகிறதே, அதில் ஒன்றிரண்டை மதுரைக்கோ, வேறு தென் மாவட்டத்துக்கோ பயன்தரும்படி போட்டால் என்ன? எல்லாமே சென்னை யைச் சுற்றித்தான் பெரும்பாலும் நிகழ் கிறது! நாங்கள் முதல்வரிடம் கேட்டும், பேசியும் பயனில்லை!'' என்றார்.

மத்திய, மாநில அரசுகளால் மதுரை புறக்கணிக்கப்படுவதை எதிர்த்து மூவாயிரம் பேரைத் திரட்டி உண்ணா விரதம் இருந்துள்ளார் மோகன்.

# 'மதுரை'யை



*'மாடுகட்டிப் போரடிச்சா மாளாது*
*செந்நெல்லுன்னு*
*யானைகட்டிப் போரடிக்கும் அழகான*
*தென்மதுரை.'*

மதுரை மாவட்டத்தின் விவசாய வளத் தைச் சுட்டும் இந்த வரிகளுக்கு இன்று அர்த்தத் தைத் தேடும் அளவுக்கு வைகையும் மதுரையும் வறண்டுள்ளன. இந்நிலையில், விளைகிற பழப் பயிர்களையும் உணவுப் பயிர்களையுமா வது முறையாக விற்றுக் காசாக்க விவசாயி களுக்கு உதவி வருகிறது தமிழ்நாடு சேம்பர் ஆஃப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரியின் மதுரை கிளை. சேம்பர் ஆஃப் காமர்ஸ் மதுரை

# மந்திரியில்லாத மதுரை;

‘‘**தொ**ழிலகங்கள் வர வேண்டுமானால் அடிப்படை வசதிகள் பெருக வேண்டும் என்பதற்காக மதுரை–விளாத்திக்குளம்–தூத்துக்குடி மார்க்கத்தில் நால்வழிச் சாலை, மதுரை–திண்டுக்கல் மார்க்கத்தில் ரயில் பாதையை இரு வழியாக்கி, மின்மயமாக்குதல்; திருச்சி–திண்டுக்கல் ரயில் பாதையையும் இருவழி யாக்குதல் என்று அந்தந்தத் துறை அதிகாரிகளின் ஆலோசனை பெற்றுச் செயல்படுத்த முனைந்திருக்கிறேன்’’ என்று சொன்ன மோகனிடம், ‘‘சுற்றுலா வையும் கோயிலையும் மட்டுமே மையப் படுத்தி மதுரையின் வளத்தைப் பெருக்கி விடலாமே?’’ என்றால்,

‘‘சுற்றுலாவைப் பெருக்க வேண்டு மானால், நூதன வழிமுறைகளைக்



– மதுரை எம்.பி. 'மோகன்

# ஏய்த்த ‘திருவாரூர்!’

...ளைக்கு 84 வயது ஆகிறது என்கிறார் அதன் தலைவர் எஸ். ரெத்தினவேலு. சமீபத்தில் தமிழக அரசு நிதிநிலையறிக்கை யில் அறிவித்த 'வேட்' வரிக்குறைப்புக்காக, இவர்கள் நிரம்பப் போராடியிருக்கிறார்கள். '' 'டிரேட்மார்க்' முத்திரை பெற்ற பொருட் களுக்குக் கூடுதல் வேட் விதிக்கப்பட்டதால் டிரேட்மார்க் பதிவுசெய்யவே வர்த்தகர்கள் தயங்க ஆரம்பித்தார்கள். இது ஆரோக்கிய மானதல்ல, உற்பத்திப் பொருட்களின் தரத்தைப் பாதிக்கும் என்பதைச் சுட்டிக் காட்டி, பதிவுபெற்ற பொருட்களுக்கு வேட் வரியை 12.5 சதவிகிதத்திலிருந்து எட்டு சதவிகிதமாகக் குறைக்கச் செய்துள்ளோம்'' என்கிறார் ரெத்தினவேலு.

**ம**துரை மாவட்டத்தில் அடிப்படை வசதிகள் பெருகுவதற்குக் குரல்கொடுத்துள் ளது சேம்பர். ''எங்கள் நாடாளுமன்ற உறுப்பினர் மோகன் அருமையான மனிதர். அவருடன்தான் நாங்கள் விமானத் துறை அமைச்சர் பிரஃபுல் படேலைப் போய்ப் பார்த்து மதுரை விமான ஓடுதளத்தை விஸ்தரிக்க வேண்டினோம். அது செயலாகி விட்டது'' என்கிறார் ரெத்தினவேலு.

ஆனால் விமான ஓட்டுனர் பயிற்சிப் பள்ளி, ஃபிளையிங் கிளப் ஆகியன நிறுவ இவர்கள் கேட்டுக் கொண்டு, அது ஒப்பு தலாகியும் நிறைவேறா

# தாயில்லாத பிள்ளை!

கையாள வேண்டும். மதுரையிலிருந்து ஊட்டி/கொடைக்கானல்/தேக்கடிக்கு ஹெலிகாப்டர் சுற்றுலா திட்டம் அறிமுகப் படுத்த மத்திய அமைச்சர் பிரஃபுல் படேலிடம் அனுமதிகூடப் பெற்றுவிட் டோம். ஆனால் அதில் சம்பந்தப்பட் டிருந்த ஹெலிகாப்டர் நிறுவனம் கேட்ட கட்டணத்துக்கு ஒப்புக்கொள்ள முடியாமல் திட்டம் கைவிடப்பட்டு விட்டது. மதுரை விமான நிலையத்தை சர்வதேச விமான நிலைய அந்தஸ்துக்கு உயர்த்தப் போராடி, சமீபத்தில்தான், ஓடுதள விஸ்தரிப்புக்குத் தேவையான நிலத்தை இலவசமாகத் தருவதாக முதல்வர் அறிவித்தார்!'' என்கிறார் மோகன்.

''அனைத்திந்திய மருத்துவ விஞ் ஞான ஆராய்ச்சிக் கழக அந்தஸ்தில் இம்மாவட்டத்தில் ஒரு மருத்துவமனை வேண்டும் என்று, மதுரை ராஜாஜி மருத்துவமனையைத் தரமுயர்த்த,



பி.டி.ஆர். பழனிவேல்ராஜன் 1990ல் முயற்சி மேற்கொண்டார். ஆனால் '99ல் நான் எம்.பி. ஆன போது கூட அது நிகழவில்லை. பதின்மூன்றாவது நாடாளுமன்றத்தில் இதற்குக் குரல் கொடுத்தேன். ராஜா (தி.மு.க.) அப்போது சுகாதாரத் துறை (மத்திய) அமைச்சர். தமிழக முதல்வர் அவரோடு பேச எனக்கு வசதி செய்து கொடுத்தார். அப்போதைய அரசு, தமிழகத்தில் ஒரு மருத்துவ மனையை AIIMS தரத்துக்கு உயர்த்துவதாக அறிவிக்கவும் செய்தது. மதுரைக்கு வர விருந்த பெருமை இன்று திருவாரூருக் குப் போய்விட்டது! இது ஏன் என்பதை நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்!''

மல் இருக்கிறது என்பது சேம்பரின் வருத்தம்.

''மதுரைக்கு நிறைய சுற்றுலாப் பயணி கள் வருகிறார்கள். இங்கு மட்டும் சிறந்த மருத்துவமனைகள் பெருக வழி செய்தால் மெடிகல் டூரிஸம் மையமாக இது மாறும். AIIMS வராமல் போனது பெருநஷ்டம்'' என்கிறார் ரெத்தினவேலு.

**சே**ம்பரின் உறுப்பினர் குழுக்கள் சீனா, வியட்நாம், இந்தோனேஷியா, மலேஷியா, சிங்கப்பூர், துபாய் போன்ற நாடுகளுக்கு தொழில்முறை பயணம் மேற்கொண்டு இலங்கை, சீனா, வியட்நாமுடன் புரிந் துணர்வு ஒப்பந்தங்கள் செய்து கொண்டுள் ளன. வர்த்தகப் பரிமாற்றத்துக்கும் தகவல் பரிமாற்றத்துக்கும் இது பேருதவியாக இருக்கிறது.

வர்த்தகக் கண்காட்சிகள் நடத்துவதிலும் மதுரை சேம்பர் முன்னணியில் இருக்கிறது. ''ஆனால் எங்களுக்கு ஒரு நிரந்தர கண்காட்சி மைதானம் அமைத்துத் தர அரசு இன்னமும் யோசிக்கிறது!'' என்று வருத்தப்படுகிறார் ரெத்தினவேலு. ''மதுரைக்கு இன்று தினமும் பதினொரு விமானங்கள் வந்து போகின்றன என்றால் அதற்குச் சிறு தொழில்கள் பெருக்கமே காரணம்.

**''மதுரையிலிருந்து இதுவரை ஒரு மத்திய அமைச்சர்கூட நியமனம் பெறவில்லையே ஏன்?''**

## "தமிழக அரசு, மதுரையில் அரசியல் ரௌடித்தனம் அற்ற ஒரு 'ஃப்ரீ ஜோனை' உருவாக்கித் தரவேண்டும்"

என்றார் மோகன்.

ஆறுதலுக்காக, ஆஸ்டின்பட்டி ஸானடோரியத்துக்கு மத்திய-மாநில அரசுகள் மேம்பாட்டு நிதி அறிவித்துள்ளன என்றாலும், தமிழ்நாட்டின் இரண்டாவது பெரிய பொது மருத்துவமனையான மதுரை பொது மருத்துவமனைக்கு 'பெப்பே' காட்டிவிட்டார்கள்!

மதுரையில் தகவல் தொழில்நுட்பப் பூங்கா வந்தால் மதுரை மாவட்டத்தின் கலாசாரமே கெட்டுப்போய் விடும் என்று வாசகர் கணபதிராமன் வெளிப்படுத்திய அச்சம் குறித்து மோகனிடம் கேட்டோம். ''என் தனிப்பட்ட கருத்தும் அதுதான்'' என்றவர், ''அதற்காக தொழில்நுட்பப் பூங்காவை நிராகரித்துவிடக்கூடாது'' என்றும் தெளிவுபடுத்தினார். ஆனால் அந்த முயற்சியும் தொய்ந்திருப்பதாகக் கூறினார். ''துறைச் செயலராக இருந்த உமாசங்கர் ஐ.ஏ.எஸ். இந்தத் திட்டம் நோக்கி நல்ல முயற்சிகளை மேற்கொண்டார்; இப்போது அவர் மாற்றப்பட்டு விட்டார்! மதுரையில் தொழில் தொடங்க சிறு தகவல் தொழில்நுட்ப நிறுவனங்களுக்குச் சலுகைகள் தந்தால் அவர்கள் முன்வருவார்கள். அரசு எல்லா சலுகைகளையும் பெரிய நிறுவனங்களுக்குத்தான் தருகிறது! போதாததற்கு, தினகரன் அலுவலகத் தாக்குதல் போன்ற சம்பவங்களால் தொழிலதிபர்கள் இந்த மாவட்டத்தில் தொழில் தொடங்குவதே வம்பு என்பது போல் அஞ்ச ஆரம்பித்துவிட்டார்கள்! அரசியல் ரௌடித்தனம் அற்ற ஒரு 'ஃப்ரீஜோனை' முதலில் இங்கே உத்தரவாதப்படுத்த வேண்டும் தமிழக அரசு'' என்கிறார் மோகன். ●

மல்லிகை மலர்களும் அதன் வாசனை திரவமும் (இதற்கு concrete என்று பெயர்) ஏற்றுமதி ஆகின்றன. அரசு இதையெல்லாம் உணர்ந்து ஒரு வர்த்தக மையம் அமைக்கவும், கண்காட்சிக் கூடம் அமைக்கவும் உடனே முன்வர வேண்டும். தமிழ்நாட்டின் இரண்டாவது பெரிய நகரம் என்ற போதிலும் மதுரையிலிருந்து இதுவரை ஒரு மத்திய அமைச்சர் கூட நியமனம் பெறவில்லை; அதனாலேயே பல இழப்புகள் எங்கள் மாவட்டத்துக்கும் அதன் தலைநகருக்கும்!''

அமைச்சரில்லா மதுரை, தாயில்லாப் பிள்ளையைப் போலப் பந்தாடப்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதுதான் உண்மை! ●



இளைஞர்கள், பெண்கள் தொழில் முனைவோராவதற்கும், மென் ஆற்றல்கள் பெறு வதற்கும் பயிற்சி வகுப்புகள் நடத்தி வரும் மதுரை சேம்பர், தொழில்-வர்த்தக வழக்குகளை ஆராய ஒரு நடுவர் மன்றத்தையும் நிறுவியுள்ளது. துறைசார்ந்த பெரும்பாலான வழக்குகள், நீதிமன்றம் செல்லாமலே இங்கு சுமுகமாகத் தீர்த்து வைக்கப்படுகின்றன.





# அடுக்குமா இந்த அநியாயம்?

மீனாக்ஷி அம்மன் கோயிலுக்கு மிக அருகே, நடக்கும் தூரத்தில் இரு முக்கிய மான இல்லங்கள் இருப்பது தெரியுமா? வரலாற்றுச் சின்னங்களாகக் கொண்டாடத்தக்க இவை, அழுக்கு மிகுந்த தெருக்களில், மறைந்து கிடக்கின்றன.

ஒன்று - ரமண மஹரிஷி வாழ்ந்த வீடு. மற்றது எம்.எஸ்.சுப்புலட்சுமி பிறந்த வீடு. "ரமண மஹரிஷி வீடு?" என்று விசாரித்தால், "தெற்கு கோபுரத்துக்கு எதுத்தாப்புல கார்ப் பரேஷன் கழிப்பறை இருக்கும் பாருங்க, அந்தத் தெருவுக்குள்ளே போங்க" என்று அடையாளம் சொல்கிறார்கள்! வேறெந்த அறிவிப்பும் இல்லை.

நுழையும்போதே நுண்ணதிர்வுகளால் நம்மைக் குளிர்விக்கிறது அவ்வீடு. இங்குதான் பதினேழு வயது இளைஞனான வெங்கட் ராமனுக்கு, மரண பயமும் அதைத் தொடர்ந்து ஆன்ம அனுபூதியும் ஏற்பட்டன. அருணாசலம் சென்றடைய அந்தரங்கக் கட்டளை பிறந்ததும் இங்குதான்.



மேல ஹனுமந்தராயன் வீதியில், கைப்பைகள் விற்கும் கடையாக மாறிப்போயிருக்கிறது மதுரை ஷண்முகவடிவு சுப்புலக்ஷ்மி பிறந்த வீடு. மேல் தளத்தில் அவர் குடும்பத்தைச் சேர்ந்த உறவினர் வசிக் கிறார்கள். இவ்வில்லத்தை ஓர் அருங்காட்சி யகமாக்கி, தரமான இசை நிகழ்ச்சிகளும் ஒலி-ஒளிக் காட்சிகளும் வழங்க அரசும் சங்கீத சபாக்களும் கை கோக்கலாமே!

ஷேக்ஸ்பியர் பிறந்த வீட்டுக் கூரையில் வேய்வதற்காக, அவர் வாழ்ந்த காலத்தில் பயன்படுத்தப்பட்ட வைக்கோல் ரகத்தையே உப யோகிக்க வேண்டும் என்று, தனிப் பயிர் விளைவிக்கிறார்கள் பிரிட் டனில். பாரத ரத்னா எம்.எஸ். வீட்டிலோ, பழைய தரையைப் பெயர்த்துவிட்டு நவீன டைல்ஸ் 'பொருத்தி' வைத்திருக் கிறார்கள். உலகை உருக்கிய சங்கீதம் இங்கே பிறந்ததற்கான ஒரே மௌன அடையாளம், கட்டிட முகப்பில் காணப்படும் வீணை வடிவம்தான்!

பேருந்து பேருந்தாகப் பெருங்கூட்டம் வந்து மீனாக்ஷியையும் சுந்தரேசுவரரையும் மட்டும் தரிசித்துவிட்டுப் போய்விடுகிறது; லட்சக்கணக்கில் செலவு செய்துகொண்டு வரும் அயல்நாட்டுப் பயணிகளும் நாலுவீதி களையும் சுற்றி வந்து வாய்பிளந்தபடி போட்டோ பிடிக்கிறார்கள்... இந்தியப் பண்பாடு மட்டுமின்றி உலக மேன்மைக் காகவே உயிர்வாழ்ந்த இரு உன்னத மனிதர்களின் சுவடுகள் அருகிலேயே இருப் பது பற்றித் துளியும் தெரியாமல்!

அடுக்குமா இந்த அநியாயம்?!







தற்போதைய நவபத் கானா தெரு அருகில் அமைந்துள்ளது பத்துத் தூண். தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்தின் கட்டுப்பாட்டில் உள்ளது. இல்லையேல் நம்மவர்கள் அதையும் இடித்துத் தள்ளி வீடுகள் கட்டியிருப்பார்கள். இருப்பினும் மிகுந்த இட நெருக்கடிகளுக்கு மத்தியிலும் கம்பீரமாக எழுந்து நிற்கின்றன பத்துத் தூண்கள்.

திருமலை நாயக்கரின் அரண்மனையில் ஒரு பகுதி ரெங்கவிலாசம். அதன் முகப்பே பத்துத் தூண்கள். தற்போது அவற்றைச் சுற்றிலும் நடந்து போக மட்டும் இடம் விட்டு, வணிக நிலையங்களும் வீடுகளும் முளைத்து விட்டன!



மாநகர மையப் பகுதியில் அமைந்துள்ளது கூடலழகர் திருக் கோயில் தெப்பக்குளம். குளத்திலே தண்ணீர் இல்லை! தெப்பக் குளத்தை மறைத்து அதன் நான்கு திசைகளிலும் நெருக்கமாகவும் உயரமாகவும் கட்டிடங்கள்.

ஐம்பது வருடங்களுக்கு முன்பு வரை, தெப்பக் குளத்தில் செயற்கையாகத் தண்ணீர் நிரப்பி, தெப்பத் திருவிழா நடந்தன. சமீப காலங்களில் தண்ணீர் நிரப்புவதில்லை. தெப்பக்குளத்தின் உட்புற தரை மீது பல்லக்கில் அமர்ந்தபடி, பக்தர்களால் மைய மண்டபத்தைச் சுற்றி தூக்கி வரப்பட்டு தெப்போற்சவம் காண்கிறார் கூடலழகர்!

# வெற்றிலை வாசம்!

"சோழவந்தான் வெத்தலை வாசத்துக்குச் சொக்கிப் போகாத நாக்கே கிடையாது. மதுரை வட்டாரத்துல எந்த நல்ல காரியம் நடந்தாலும் பொருட்கள் வாங்கற லிஸ்ட்ல முதல்ல எழுதறது வெத்தலையாதான் இருக்கும். மதுரையைச் சுத்தி எவ்வளவு தண்ணீர் பஞ்சம் வந்தாலும் சோழவந்தான் மட்டும் பசுமையாத்தான் இருக்கும். அந்தக் காலத்துலயே இதைக் கேள்விப்பட்ட சோழ மன்னன் ராசராசன் மதுரை சோழவந்தானைச் சுத்திப் பார்க்க வந்தவர், 'சரிதான், பாண்டியன் பிரதேசத்தில் ஒரு சோழ மண்டலமா!' என்று வியந்தாராம். அதனால்தான் எங்க ஊருக்கு 'சோழ வந்தான்னு' பேர் வந்துச்சு" என்கிறது ஊர் பெரிசு ராமசுப்பு.



"என்னது விலை குறைச்சு வேணுமா... மதுரை மல்லின்னா சும்மாவா? கடல்ல தூக்கிப் போட்டீங்கன்னா அந்த கடல் பூரா மணக்கும்ங்க. எனக்கு வர்ற போனெல்லாம் லோக்கல் இல்லீங்க. எல்லாம் வெளியூரு, வெளி மாநிலம்தான். அந்த அளவுக்கு நம்ம பிஸினஸ் பறக்குதுங்கோ."






அலங்கா நல்லூர் முத்தாலம்மனுக்கு உயிர் பலி கொடுப்பது ஊர் மரபு. அதை மூன்று வருஷம் நிறுத்திட்டாங்க. அதன்பின் பஞ்சம், பசி, பிணி வந்தன. இனி சாமி குத்தத்துக்கு ஆளாகக் கூடாது என்று விடாமல் ஜல்லிக்கட்டு நடத்திட்டு வர்றோம். ஜல்லிக் கட்டு ஆரம்பிக்கும்போது முத்தாலம்மன் உத்தரவோடு தான் தொடங்கும். அதில் நடக்கும் உயிர் பலியில்தான் முத்தாலம்மனின் உள்ளம் குளிரும். அதை கோர்ட், கேஸ்ன்னு காரணம் காட்டி நிறுத்தினா அம்மன் கோபத்துல ஊரே நாசமாகும் என்கிறது காதுவரைக்கும் மீசை வெச்ச ஒரு பெருசு!

அனுப்பானடி இரா.கல்யாணசுந்தரம். தொடர்ந்து பத்திரிகை வாசிப்பவர்களுக்கு மிகவும் பரிச்சயமான பெயர். பத்திரிகை துணுக்குகள், வாசகர் கடிதங்கள், கேள்விகள், சிறு கட்டுரைகள் என கடந்த ஐம்பதாண்டு களாக பத்திரிகைகளுக்கு எழுதி வருபவர். மதுரை மாநகருக்குள் தினசரி சைக்கிள் பயணம் மேற்கொள் பவர். முப்பது வருட சைக்கிளைப் பிரிய மனமில் லாதவர். சைக்கிள் மிதித்துப் போவது இவருக்குச் சர்க்கரைப் பொங்கல் சாப்பிடுவது மாதிரி அவ்வளவு இஷ்டம். பத்திரிகைகளுக்கென எழுதுவதில் ஆர்வம் மிகுந்த இந்த மதுரை இளைஞரின் வயது எழுபது.



மாநகராட்சி உறுப்பினராகப் பதவி யேற்ற எட்டு மாதங்களுக்குள், மதுரை மாநகருக்குள் வைத்துப் படுகொலை செய்யப்பட்டவர் கவுன்சிலர் லீலாவதி. அப்பொழுது அவருக்கு வயது நாற்பது. அன்புக் கணவர் குப்புசாமி, எவர்சில்வர் பட்டறைத் தொழிலாளி. பதினெட்டு, பதினாறு, பதினான்கு வயதுகளில் மூன்று மகள்கள், வீட்டு வாசல்படி போல. அந்தக் கணத்தில் நிலை குலைந்து போனது அக்குடும்பம்.

கொலையாளிகள் ஏழு பேர் கைது செய்யப்பட்டனர். அவர்களில் ஒருவர் இறந்து போனார். ஒருவர் விடுதலை ஆனார். மற்றையோர்க்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. தண்டனைக் காலம் முடியும் முன்பாகவே, அண்ணா பிறந்த நாளையொட்டி மற்றையோரும் விடுதலை செய்யப்பட்டனர். அதில் ஒருவர் மட்டும், சிறையிலிருந்து

**"என் மனைவி மரணத்தை மறக்கவே முடியாது. காரணம், அது இயற்கை மரணமில்லையே!"**

பரோலில் வீட்டுக்கு வந்தபோது விதிகளை மீறிய செயல்களுக்காக இன்னமும் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார். இது கொடுஞ்செயல் புரிந்தோரின் கிரிமினல் ஹிஸ்டரி.

ஆனால், படுகொலைக்குப் பின்னர் அந்தக் குடும்பத்தின் நிலை? நிழலாய்த் தொடர்ந்து வந்த கணவர், நினைவிலே இனிமையாய் உலவி வந்த மூன்று பெண் பிள்ளைகளின் ரியல் ஸ்டோரி?... இதோ லீலாவதியின் கணவர் குப்புசாமி பேசுகிறார்:

"பன்னிரண்டு வருஷம் ஆச்சு, அந்தப் பாதகம் நடந்து. அப்ப எனக்கு


★ குப்புசாமி

வயசு நாப்பத்தியொண்ணு. பொம்பளைப் புள்ளைங்க மூணுக்கும் படிப்பும் முடியலை. அப்படியே இடிஞ்சி போயிட்டோம் நாங்க நாலு பேரும். எங்க துயரத்தைப் பத்திரிகைகள் உள்ளபடியே எழுதிச்சு. தமிழ்நாடு முழுவதும் எங்க குடும்பத்தைப் பத்தி அந்தச் சமயத்துல ஓர் அனுதாபம் உருவானது.




எங்க துயரத்தைப் பகிர்ந்துக்க நெறைய கடிதங்கள் வந்திச்சு. முகம் தெரியாதவங்க எல்லாம் ஐம்பது - நூறுன்னு அந்தச் சமயத்துல மணியார்டர் பண்ணியிருந்தாங்க. பெங்களூர்லேர்ந்து ஒரு அம்மா, நூறு ரூபா அனுப்பியிருந்தாங்க. என்னோட குடும்பத்துக்கும் அவுங்களுக்கும் என்ன சம்பந்தம்? நான் யாரோ... அவுங்க யாரோ? இவுங்க எல்லாம் எங்க குடும்பத்து மேல இத்தினி கரிசனமா ஏன் கடுதாசி எழுதிப் போடணும்? நூறோ ஐம்பதோ அந்தக் காசு பணத்தை ஏன் அனுப்பி வைக்கணும்?

அப்பத்தான் என் உள்ளுணர்வு சொல்லிச்சு. நாம தளர்ந்துடக் கூடாது. சோர்ந்து போயிடக் கூடாது. இந்த மூணு பொண்ணுங்களுக்கும் நான் அப்பா மட்டுமல்ல... அம்மாவும் நாந்தான்னு முடிவு செஞ்சேன்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி என் குடும்பத்தைக் கை கழுவி விட்டுடலை.

# நெருப்பில் விழுந்த இதயம்





✱ லீலாவதி

ரொம்ப அக்கறையோட எங்களைப் பாதுகாத்துச்சு. மொதல் பொண்ணு கலாவதியோட கல்யாணத்தை, மார்க்சிஸ்ட் கட்சியே கட்சி செலவில் நடத்தி வைச்சது. அரசு தரப்பில் மதுரை கலெக்டர் ஆபீசில் சமூக நலத்துறை அலுவலகத்தில் அட்டெண்டர் வேலை கிடைச்சது. கலாவதியின் கணவருக்கு, மதுரை மார்க்சிஸ்ட் கட்சி ஆபீஸில் வேலை. ஒரு குழந்தை. திருப்பரங்குன்றத்துல வீடு. அந்தச் சமயத்துல அரசு ஒரு லட்ச ரூபாய் நிதி அளிச்சது. அதை அப்படியே மூத்த பொண்ணுக்கு,



"லீலாவதி, பருகொலை ஆன அந்த நிமிடமே என் இதயம் நெருப்பில் வீழ்ந்து போனது!"

திருப்பரங்குன்றத்துல வீட்டு ஒத்திக்குக் (லீஸ்) கொடுத்திட்டேன்.

**எ**ங்களோட ரெண்டாவது பொண்ணு செஞ்சுகிட்ட தற்கொலை, எங்க குடும்பத்தைத் திரும்பவும் துயரத்தில் ஆழ்த்திடுச்சு.

ரெண்டாவது பொண்ணையும், மூன்றாவது பொண்ணையும் கஷ்டப்பட்டுப் படிக்க வெச்சேன். ரெண்டாவது பெண் துர்கா, எம்.ஏ. படிச்சது. அவளுடைய காதல் விஷயம் எனக்குத் தெரிய வந்தது. பதிவுத் திருமணம் செஞ்சு வைச்சேன். கணவருக்கு நிரந்தரமாக வேலை கிடைக்கலை. வருஷம் முழுவதும் வேலை தேடிட்டே இருந்தால், வாழ்க்கை என்னாகும்? குழந்தை பிறந்துச்சு. கஷ்டங்கள் அதிகமானது. அவளால தாங்க முடியலை. ஒரு வயசுக் குழந்தையோட, தானும் தற்கொலை பண்ணிக்கிட்டுச் செத்துப் போச்சு துர்கா.

என் மனைவி மரணத்தையும் என்னால மறக்க முடியலை. என் பொண்ணு மரணத்தையும் மறக்க முடியலை. காரணம், ரெண்டுமே இயற்கை மரணம் இல்லியே!

**மூ**ணாவது பொண்ணு தான்யா. மதுரை காமராஜர் பல்கலையில் எம்.ஏ. சோஷியாலஜி. சென்னையில பான்யன் தொண்டு நிறுவனத்துல வேலை. அவளுக்குக் கல்யாணமாகி ரெண்டு மாசம் ஆகுது. அவளோட கணவர், கம்ப்யூட்டர்ல வேலை. சென்னையில் இருக்காங்க.

இப்ப இந்தப் பட்டறைதான் என்னோட உலகம். இந்த உழைப்புதான் என்னோட ஜீவன். இந்தச் சுத்தியல், வெட்டிரும்பு, சிற்றுளி,



★ லீலாவதியின் குடும்பத்தினர்

பித்தளை மரக்கால் - இது ஒவ்வொண்ணுலயும் என்னோட லீலாவதி நெறைஞ்சிருக்கா. இதுலேர்ந்து கிளம்புற சத்தம் அவ என்னோட பேசிட்டே இருக்கற மாதிரி எனக்குக் கேட்குது. பதிலுக்கு நான் எதுவும் பேசுறதில்லை. ஏன்னா... என்னோட மௌன மொழி அவளோட மனசுக்கு மட்டும்தான் புரியும். லீலாவதி படுகொலை ஆன அந்த நிமிடமே, என் இதயம் நெருப்பில் வீழ்ந்து போனது!'' கண்கள் குளமாகப் பேசிக்கொண்டேயிருக்கிறார் குப்புசாமி.



கணபதிராமன்





பழனியம்மாள்



இராமசாமி

# பர்ஸைப் பறிக்கும் பஸ் கட்டணம்!

"பெரியார் பஸ் ஸ்டாண்டுலேர்ந்து மாட்டுத் தாவணி பஸ்ஸ்டாண்டுக்கு அரசாங்க பஸ்ல அஞ்சு பேர் போனாக்க நாற்பது ரூபாய் ஆகுது. அதே இடத்துக்கு ஆட்டோவுல போனாக்க அதே நாற்பது ரூபாய்தான். பின்ன எதுக்கு அரசாங்கத்துல பஸ்ல'... பேசாம ஆட்டோவுலயே போயிட லாமே...? ஒரு இடத்திலேர்ந்து இன்னொரு இடத்துக்குப் போகணும்னா... ஒரு கட்டணம் வாங்கறாங்க. அதே இடத்திலேர்ந்து புறப்பட்ட இடத்துக்கு திரும்ப வர அதைவிட அதிகக் கட்டணம் வாங்கறாங்க. இது மாதிரி காலக் கொடுமை வேறெங்கயும் பார்க்க முடியாது. இதை எந்தக் கட்சிக்காரனும் தட்டிக் கேட்கறது கிடையாது. கூட்டுக் கொள்ளையடிக்கறாங்க! இவங்களுக்கெல்லாம் ஓட்டுப் போடறோம் பாருங்க... அதுதான் நாங்க செய்யற பாவம்" - காட்டமாகப் பேசுகிறார் ஆரப்பாளையம் பஸ்ஸ்டாண்டு போவதற்காக, பெரியார் பஸ்ஸ்டாண்டில் காத்திருக்கும் பெரியவர் இராமசாமி.

இதுபோல மதுரையில் ஏராளமான புலம்பல்களைக் கேட்க முடிகிறது. மதுரை மக்களின் வேலை வாய்ப்பு பெரும்பாலும் கடைகளை மட்டுமே நம்பி இருக்கிறது. அதுவும் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலைச் சுற்றியுள்ள போட்டோ கடை, எஸ்.டி.டி. பூத், நகைக் கடை, பலகாரக் கடை போன்றவற்றில் வேலை செய்பவர்கள் ஏராளம் பேர். இவர்களில் பெரும்பாலோருக்கு சராசரி மாத வருமானம் ரூ.2000லிருந்து 3000 வரைதான் இருக்கும். இவர்களில் ரூ.1000 மட்டுமே சம்பளமாகப் பெறுபவர்களும் கணிசமாக இருக்கத்தான் செய்கிறார்கள். இப்படிக் குறைந்த வருமானத்தில் வாழ்கிற அடித்தட்டு மக்களே பெரும்பாலும் அரசாங்கப் பேருந்துகளைப் பயன்படுத்துபவர்


காலியாக சொகுசுப் பேருந்து

## “எங்க வருமானத்துல பாதியை பஸ்ஸுக்கே கொடுக்கவேண்டியதா இருக்கு”




களாக இருக்கின்றனர். இப்போது இவர்கள் சென்று வரும் பேருந்துகள், சொகுசுப் பேருந்துகளாக்கப்பட்டதால், அதிகமான கட்டணம் கொடுத்துப் பயணிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றனர். இதனால், இவர்களின் மாத வருவாயில் கணிசமான அளவு பஸ்ஸுக்குக் கொடுக்க வேண்டிய நிலை. சொகுசுப் பேருந்து மட்டும்தான் மதுரையில் இயக்கப்படுகிறதா.... சாதாரணக் கட்டணப் பேருந்து இல்லையா என்றால்... இருக்கிறது. நான்கு சொகுசுப் பேருந்துகளுக்கு ஒரு சாதாரணக் கட்டணப் பேருந்து. அதற்குக் காத்திருக்கும் நேரத்தில் நடந்தே வீடு போய்ச் சேர்ந்து விடலாம் என்ற புலம்பலையும் நம்மால் கேட்க முடிகிறது!

“**நா**னும், ஆரப்பாளையம் பஸ் ஸ்டாண்டுக்குப் போறதுக்காக அரை மணி நேரமா காத்துக்கிட்டு இருக்கேன். நிமிஷத்துக்கு ஒரு தரம், எட்டு ரூபாய் டிக்கெட் பஸ்ஸுதான் போவுது. மூணு ரூபாய் டிக்கெட் பஸ்ஸைக் காணோம். என் கையில இருக்கறதே பதினைஞ்சு ரூபாய்தான். இதுல பஸ்ஸுக்கு எட்டு ரூபாய் குடுத்தா நானும் என் குடும்பமும் என்ன ஆகறது? இன்னும் அரை மணி நேரம் ஆனாலும் பரவாயில்லை. மூன்று ரூபாய் டிக்கெட் பஸ்லதான் போய் ஆகணும். சூரியன் கட்சி ஆட்சிக்கு வந்தாலே விலைவாசியெல்லாம் ஆகாசத்துல பறக்க ஆரம்பிச்சிடுது” என்கிறார் பழனியம்மாள்.

“**உ**ள்ளூர் பஸ்ல மட்டும் இல்ல ஸார். மதுரைவாசிகள், வெளியூருக்குப் போற பஸ்லயும் வஞ்சிக்கப்படுகிறோம்” என்கிறார் கணபதிராமன்.

“நூறு கிலோ மீட்டருக்கு மேல் செல்லும் எல்லாப் பேருந்துலயும் பாயிண்டு டு பாயிண்ட், எக்ஸ்பிரஸ்னு போட்டு அதிகக் கட்டணம் வசூலிக்கறாங்க, சென்னை, திருச்சி, கோயம்புத்தூர் போன்ற ஊர்களுக்குப் போற எல்லா பஸ்ஸுமே அல்ட்ரா டீலக்ஸ் பேருந்துகளாக இயக்கப்படுது. சென்னைக்குச் செல்ல விரைவுப் பேருந்தில் 136 ரூபாய் கட்டணம். அல்ட்ரா டீலக்ஸ் கட்டணம் 240 ரூபாய். அதுவும் திருவிழா நாட்களில் சிறப்புப் பேருந்துன்னு 500 ரூபாய் வரைக்கும் கேட்கிற கொடுமையெல்லாம் நடக்குது. அரசாங்கமும் பாத்துக்கிட்டுச் சும்மாத்தான் இருக்குது” என்கிறார்.

“**ம**துரையில ஓடுற ஆட்டோக்கள் 100க்கு 20 ஆட்டோ பர்மிட் இல்லாதவைதான். ஒரு முக்கியமான அரசியல் புள்ளியோட பினாமிங்க பேர்ல ஓடுது. இந்த ஆட்டோக்களோட வருமானத்தைக் கூட்டறதுக்காகத்தான் பஸ் கட்ட

ணத்தை உயர்த்தினாங்கன்னு ஒரு பேச்சு'' என்கிறார் ஃபோட்டோவுக்கு மறுத்துவிட்ட ஒரு ஆட்டோ டிரைவர்.

**மதுரை மாவட்ட அரசுப் போக்குவரத்துச் சங்க (சி.ஐ.டி.யு) பொதுச் செயலாளர் பிச்சையிடம் பேசினோம்...**

''அந்தந்தப் பகுதியிலிருக்கிற போக்குவரத்துத் துறை மேல் அதிகாரிகள் கட்டணத்தை நிர்ணயித்துக் கொள்ளலாம்' என்று வாய் மொழி உத்தரவு போட்டிருக்கறதாச் சொல்றாங்க. கட்டணம் உயர்த்தலாம்னு இன்னும் எந்த அரசு ஆணையும் வரலை. நீங்க சொல்ற சொகுசுப் பேருந்துக்கு, போக்குவரத்துத் துறை செய்கிற செலவு ஜாஸ்தியா இருக்கு. ஆனா, அதன் மூலம் வருமானம் ரொம்பக் கம்மி. சொகுசு பஸ்ல அதிகக் கட்டணம் வாங்கறதால சாதாரண பஸ்ல அதிகமா கூட்டம் வர்றது. எங்கள் சங்கத்தைச் சேர்ந்த பலர் அதில் பணிபுரிகிறவர்கள், மன அழுத்தத்துக்கு ஆளாகி இருக்கின்றனர். மதுரையில் ஓடக் கூடிய 500 அரசுப் பேருந்துகளுள் 180 சொகுசுப் பேருந்துகள் என்றால் பாருங்களேன்'' என்கிறார்.

**''ஒரு முக்கியமான அரசியல் புள்ளியோட பினாமிங்க பேர்ல ஓடுது''**

**மதுரை மாவட்டப் போக்குவரத்து அலுவலர் ஒருவரிடம் கேட்டோம்:**

''நீங்க சொல்றது உண்மைதான். திருச்சியைவிட மதுரையில் அதிகமான பஸ்கட்டணம்தான் வாங்குகிறோம். ஆனால், அதற்கென நாங்கள் செய்து கொடுத்திருக்கும் வசதிகள் ஏராளம். தானியங்கிக் கதவு, ஒற்றை வரிசை கொண்ட இருக்கை, அலுப்பில்லாத பயணம் மற்றும் எங்கும் நிற்காமல் உரிய இடத்தில் மட்டும் நின்று செல்லும் பேருந்து. எல்லாவற்றுக்கும் மேலாக பயணம் செய்கிறோம் என்ற அலுப்பே இல்லாமல் பயணிகளை உரிய இடத்தில் கொண்டு சேர்ப்பதில் தமிழகத்திலேயே மதுரை போக்குவரத்துத் துறைதான் முதலிடத்தில் உள்ளது.''

சொகுசுப் பேருந்துக்கு செய்யும் செலவை விட, வரும் வருமானம் குறைவு என்கிறார்களே?

''அவர்கள் சொல்வதிலும் உண்மை இருக்கிறது. ஆரம்பத்தில் இருந்த கலெக்ஷன் குறைவு, போகப் போக சரி செய்யப்பட்டிருக்கிறது. எதிர்வரும் காலங்களில் லாபகரமாக சொகுசுப் பேருந்தை இயக்குவதற்குச் செயல் திட்டத்தையும் வகுத்திருக்கிறோம். வெளியூர்களுக்குச் செல்லும் எக்ஸ்ப்ரஸ் பஸ்களில் மட்டும் எங்களால் கட்டணத்தைக் குறைக்க இயலாது. காரணம்... அதை இயக்குவதற்கு எங்களுக்கு ஆகும் நடைமுறைச் சிக்கல்தான். ஆரம்பத்தில் எழுந்த முணுமுணுப்பு இப்பொழுது மக்கள் மத்தியிலும் பேருந்தை அதிகமாகப் பயன்படுத்தும் தொழிலாளர்கள் மத்தியிலும் குறைந்திருக்கிறது. காரணம் எங்களுடைய சேவைதான்'' என்கிறார் இன்ஸ்பெக்ஷன் துறையில் இருக்கும் அந்த அலுவலர்.

வாசகர் யோசனை: **கணபதிராமன்**




எப்பவும் பத்திரிகையாளர்களை அருகில் அண்டவிடாத மு.க.அழகிரியிடம், தி.மு.க.வின் தென்மண்டல அமைப்புச் செயலாளராக்கப்பட்ட பிறகு கொஞ்சம் மாற்றம் தெரிகிறது. கல்கி மதுரை ஸ்பெஷலுக்காக அவரைச் சந்தித்தபோது, நாம் ஜாலியாகக் கேள்விகளை வீசினோம். இதோ அவரது பவுண்டரி பதில்கள்...

**என்ன படிச்சிருக்கீங்க...?**

! பி.ஏ. வரலாறு.

*(வரலாறு படைக்கப் பிடிக்குமா?)*

**படிக்கும்போது அரசியல் ஆர்வம்?**

! கலைஞரோட மகனா பிறந்துட்டு ஆர்வம் இல்லாம இருக்குமா?

*(நாங்க கேள்வி கேட்டா, திருப்பி நீங்களும் கேள்வி கேட்கறீங்களே.)*

**உங்களுக்குப் பிடிச்ச அரசியல் தலைவர் யார்?**

! சோனியா காந்தி.

*(எம்.பி.யா சந்திக்க இப்பவே அப்பாயின்மென்டா?)*

**கடவுள் நம்பிக்கை உண்டா?**

! நான் அய்யா பெரியார்மேல நம்பிக்கை கொண்டவன்.

*(ஹீ... ஹீ...)*

**கடவுள் உங்கள் முன் தோன்றினால்?**

! என்ன வேணும்னு கேட்பேன்.

*(பார்த்துங்க... எம்.பி. ஸீட் கேட்டுடப் போறார்!)*

**அப்பா கலைஞர்... தலைவர் கலைஞர்?**

! ஆரம்பத்திலேர்ந்தே தலைவர் கலைஞர்தான் என் சாய்ஸ்.

*(அவருக்கு யாரு சாய்ஸ்?)*

**காலையில் படிப்பது?**

! முரசொலி, அப்புறம் மற்ற தினசரி...

*(உடன்பிறப்புக்குக் கடிதம் எழுதுவீங்களோ!)*

**கலைஞர் வசனம்... டி.எம்.எஸ். பாட்டு?**

! கலைஞர் வசனம் என்னைத் துடிப்பாக்கும். டி.எம்.எஸ். பாட்டு மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கும்.

**மதுரைக்கு வராம இருந்திருந்தீங்கன்னா?**

# ஜாலி

! நீங்க கேள்வி கேட்க மதுரைக்கு வந்திருக்க மாட்டீங்க..

*(எங்க இருப்பீங்களோ அங்க வந்திருப்போம்)*

**தி.மு.க.வில் நீங்க விழுதா... வேரா..?**



# அழகிரி

! வேராய் மாறும் விழுதாக இருக்க ஆசை.

*(எதாவது ஒன்னு சொல்லுங்க ஸார்)*

**வீட்டுல மதுரை ஆட்சியா... சிதம்பரம் ஆட்சியா..?**

! மீனாட்சி ஆட்சிதான்.

*(காந்தி மேடம், கங்கிராட்ஸ்)*

**யாரோட மேடைப் பேச்சு பிடிக்கும்?**

! அறிஞர் அண்ணா, தலைவர் கலைஞர்...

*(அப்ப ஸ்டாலினோட பேச்சுக்குக் 'கா'வா?)*

**அம்மா செல்லமா... அப்பா செல்லமா?**

! அம்மா செல்லம்...

*(அச்சச்சோ ஓ...ஓ...ஓ...)*

**கலைஞர் மகனாக இருப்பதில் என்ன சங்கடம்?**

! சினிமா நடிகர் மாதிரி என்னை வேடிக்கை பார்க்கறது சங்கடந்தானே.

*(படத்துல நடிக்கட வேண்டியதுதானே)*

**கயல்விழி அரசியல் வாரிசா?**

! என் வாரிசு.

*(நல்லதுங்க)*

**நீங்க கிங்கா... கிங் மேக்கரா?**

! தி.மு.க.வோட சோல்ஜர்.

*(யுத்தம் யாரோட?)*

**பலிக்காத கனவு?**

! அப்படி எதுவும் இல்லை.

*(அப்ப எம்.பி. கனவும் பலிச்சிடும்)*

**பிடித்த கலர்?**

! மஞ்சள்.

*(கறுப்பு-சிவப்பு வருத்தப்படுமே ஸார்!)*

**விரும்பிப் படிக்கும் புத்தகம்?**

! நெஞ்சுக்கு நீதி.

*(வஞ்சிக்கப்பட்டவங்களுக்கு நீதி கிடைச்சா சரிதான்.)*

**நடிக்கும் ஆசை உண்டா?**

! எனக்கு எப்பவுமே நடிக்கத் தெரியாது.

*(என்ன ஸார் இப்படிச் சொல்லிட்டீங்க?)*

**காதலர் தினம் கொண்டாடலாமா?**

! கூடாது.

*(கூடாதுன்னா கூடாதுதான். நோ பேச்சு)*

**உங்கள் பலம்... பலவீனம்..?**

! பலம் - கோபம்; பலவீனம்- அதீத கோபம்.

*(அழகில்லையே!)*

**ஏன் மாடர்ன் கண்ணாடி போடலை?**

! யாரும் இதுவரைக்கும் சொல்லலை. இனிமே பாருங்க.

*(கலைஞர் கண்ணாடியா?)*

**திருமங்கலம்?**

! தி.மு.க.வின் பூஸ்ட் .

*(அப்ப எம்.பி. எலெக்ஷன்?)*



ரொம்ப வெண்மையாக இருக்கும். சூப்பரா வாசம் வீசும். காத்துல மிதந்து வர்ற வாசம் இருக்கே... அதை உணர்ந்து பார்த்தவங்களுக்குத்தான் தெரியும்!'' எனச் சொல்கிறார் மதுரையில் பிரபல மல்லிகை வணிகர் ஜெகதீசன்.

''மதுரை மல்லியோட தாய் மண் எது தெரியுமா? இராமேஸ்வரத்திலுள்ள தங்கச்சி மடம். கடல் உப்பு சார்ந்த மண்ணுல, மதுரை மல்லியோட தாய்ச் செடி வளர்க்கப்படுது. அங்கேருந்து மல்லிகைச் செடி நாத்துகளாகக் கொண்டாந்து, மதுரை ஏரியாவுல சாகுபடி பண்றாங்க. இதே மதுரை மல்லிகைச் செடி நாத்துகளை, தமிழ்நாட்டுல மத்த மாவட்டப் பகுதிகள்ல கொண்டு போய் சாகுபடி பண்ணிப் பார்த்தாங்க... மத்த இடங்கள்ல மதுரை மல்லியா அதுக பூக்கல. அந்த ஊரு மல்லியாத்தான் பூத்துச்சு. காரணம், மதுரை ஏரியா மண் வாகு!'' என்கிறார்.

# கடல்

மதுரை சிலுக்குவார்பட்டியில் அதிகாலைக்கு முன்பாகப் பறிக்கப்படும் மல்லிகைப்பூ, காலை பதினொரு மணிக்கெல்லாம் சென்னை, சிந்தாதிரிப்பேட்டை வந்து விடுகிறது. மதுரை மல்லிக்கு அத்தனை மவுசு. சென்னை பூச்சந்தையில், மதுரை மல்லி இத்தனை மணிக்கு வருகிறது என தற்போதும் போர்டு எழுதிவைக்கப் படுகிறது.

''மதுரை மல்லி மத்த ஏரியா மல்லிகைப்பூக்களைக் காட்டிலும்

மதுரை மாவட்டத்தின் மேற்குப் பகுதி, தெற்குப் பகுதி, திண்டுக்கல், விருது நகர் மாவட்டங்களில் மதுரை மல்லி சாகுபடி ஆகிறது. இருபதாயிரத்துக்கும் மேற்பட்ட விவசாயிகள், சாகுபடியில் ஈடுபட்டுள்ளனர். நேரடியாகவும், மறைமுகமாகவும் லட்சக்கணக்கானோர்க்கு வேலை வாய்ப்பு தந்து கொண்டிருக்கிறது மதுரை மல்லி.




தமிழ்நாட்டுல மத்த மாவட்டங்கள்ல மல்லிகைக்குனு சீசன் உண்டு. அப்பத்தான் ரொம்பவும் கிடைக்கும். வெலையும் சுமாரா இருக்கும். சில மாதங்கள்ல மல்லிகைப்பூ ஒரு முழம் கூட கிடைக்காது. ஆனா, மதுரை மல்லி அப்படியில்லே. மதுரை சுற்று வட்டாரத்துல மட்டும் வருஷம் பன்னிரண்டு மாசமும் மல்லி சாகுபடி நடந்துட்டே இருக்கும்.

''மதுரை, சென்னை உட்பட எட்டு நகரங்களில் எங்களுக்குப் பூ மார்க்கெட் இருக்கு. மதுரை மல்லி எங்களோட மெயின். 1962லிருந்து மதுரை மல்லி வியாபாரமும், சாகுபடியும் செஞ்சு வர்றேன். மதுரை மல்லி என்னோட வாழ்க்கையோட கலந்து போன ஒன்னு. வாரியார் சுவாமிகள் எனக்கு 'மல்லிகைச் சக்கரவர்த்தி' விருது தந்து கௌரவப்படுத்தியிருக்காங்க. ஒரு நாளைக்கு மல்லிகைப் பூ மூணு வித ரேட்டுக்கு ஏலம் போகும். காலம்பற ஒரு விலை. மதியம் ஒரு விலை. சாயந்தரம் ஒரு விலை. இத்தினி வருசமா இதுல புழங்கற என்னாலயே, நாளைக்கு என்ன ரேட் போகும்னு இன்னைக்கு நிச்சயமா சொல்ல முடியாது.

மதுரை, விருதுநகர், திண்டுக்கல் சுற்று வட்டாரப் பகுதிகள்ல அதிகாலை நேரங்கள்ல மதுரை மல்லிய ஏத்திகிட்டு வேனும், காரும் பறக்கும். பூச்சந்தைக்கு வந்து சேரும் மதுரை மல்லி, பக்குவமா பேக் பண்ணப்பட்டு மதுரை ஏர்போர்ட்டுக்குப் போகும். சென்னை, மும்பை, டெல்லி போன்ற நகரங்களுக்கு தினசரி விமானங்களில் பறந்து செல்கிறது மதுரை மல்லி. துபாய், லண்டன், பாரிஸ் போன்ற இடங்களுக்கு ஆர்டரின் பேரில், எங்களின் சென்னை பூச்சந்தையிலிருந்து வாரத்துக்கு ஒரு முறை அல்லது இருமுறையெனக் கடல் கடந்து செல்கிறது. உதாரணமாக, பூவினுடைய கிரயம் நூறு ரூபாய் எனில், அதனைப் பாதுகாப்பாகவும் வாடிப் போகாமலும் பேக் செய்து அனுப்ப நானூறு ரூபாய் ஆகும்!'' எனக் கூறுகிறார் நாகரத்தினம். ●

# தாண்டும் மல்லி!


✱ நாகரத்தினம்






இலக்கியச் சான்றுகள் ஏராளம்.

● நம் காலத்தில் அண்ணாவுக்குப் பிறகு 1986ல் எம்.ஜி.ஆர். ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டை சென்னையில் நடத்தும்போது, தஞ்சையில் 'நான்காவது தமிழ்ச் சங்கம்' ஆரம்பிக்கப்படும் என அறிவித்தார்.

● வேறெந்தத் தமிழ் மன்னர்களும் செய்யாததைப் பாண்டிய மன்னர்கள் செய்தார்கள் என்றால், அது சங்கம் வைத்து தமிழ் வளர்த்ததுதான்.

● கடற்கோளால் அழிந்த தொன் மதுரையிலும் இன்றைக்கு இருக்கும் தென் மதுரையிலும் தமிழ்ச் சங்கம் இருந்ததற்கான

● அப்போது அமைச்சராக இருந்த காளிமுத்து, ஏற்கெனவே 1901ம் ஆண்டு பாண்டித்துரை தேவரால் நான்காவது தமிழ்ச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது என்ற தகவலைத் தெரிவிக்கிறார். எனவே, மதுரையில் உலகத் தமிழ்ச் சங்கம் அமைக்கப்படும் என எம்.ஜி.ஆர். அறிவிக்கிறார். ஆனால், அறிவிப்பு அறிவிப்போடு சரி!

# உயிர்பெறுமா உலகத்

### குப்பைச் சாலைகள்!

**ம**துரை நகருக்குள் குப்பைத் தொட்டிகள் போதிய அளவு வைக்கப்படவில்லை. இதனால் குப்பைகளைச் சாலையில் கொட்டி நாறடிப்பதும், சாவகாசமாக லாரிகளில் குப்பைகளை அள்ளிப் போட்டு மூடாமல் சிதறவிட்டுக் கொண்டே பறப்பதும் வாடிக்கையாகிவிட்டன. போதிய அளவு குப்பைத் தொட்டிகளை வைத்து உடனுக்குடன் அவற்றை எடுத்துச் சென்று நகரைத் தூய்மையாக்கினால், நோயற்ற வாழ்வு வாழ முடியும். எதிர்காலச் சந்ததிக்கு சுகாதாரமான சமுதாயத்தைப் பரிசளிக்க உதவும்.



– இரா.கல்யாண சுந்தரம், மதுரை




● பிறகு மறுபடியும் முதல்வராக கலைஞர் வந்த போது 'மதுரையில் உலகத் தமிழ்ச் சங்கம்' என்று உறுதி யளித்தார்.

● மதுரை, அரசு சட்டக் கல்லூரிக்கு அருகில், ரேஸ் கோர்ஸ் மைதானத்துக்கும் காந்தி மியூஸியத்துக்கும் இடையில் தங்கராஜ் சாலையில் 14 ஏக்கர் நிலத்தை உலகத் தமிழ்ச் சங்க கட்டடத் துக்காக, தமிழக அரசு கையகப்படுத்தி தகவல் பலகையும் ஊன்றியது. இப்போது தகவல் பலகை மட்டுமே இருக்கிறது. உறுதி இன்று வரை இறுதியாகவில்லை.

● "இவ்வளவு காலமாகியும் மதுரைக்கு உலகத் தமிழ்ச் சங்கம் கொண்டு வர முடியாமைக்குக் காரணம், இங்குள்ள தமிழறிஞர்களிடம் போதிய ஒற்றுமை இல்லாமைதான்" என்கிறார் நான்காம் தமிழ்ச் சங்கத்தின் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் சின்னப்பா.

● உலகத் தமிழ்ச் சங்கத் துக்கென்று ஒதுக்கப்பட்ட இடம் இன்று வேலிக்கருவை முள் மண்டி, புதர்க்காடாகக் காட்சி அளிக் கிறது. போதாததற்கு கழிப்பிடமாகவும் பயன்படுத்த ஆரம்பித்துவிட்டனர்.

படம் : **சுந்தரம்**

# தமிழ்ச் சங்கம்?




### இடம் மாறிய நூலகம்!

**ம**துரையின் 53வது வார்டு அனுப்பானடியில் 15 ஆயிரம் பேர் வசிக்கிறார்கள். இவர்களுக்காக பல காலமாக இயங்கி வந்த பொது நூலகத்தை ஒரு மைல் தூரமுள்ள வேறு இடத்துக்கு மாற்றிவிட்டார்கள். மாற்றப்பட்ட இடம் மேல அனுப்பானடி. அதாவது அனுப்பானடிக்குரிய கண்மாயைத் தூர்த்து தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் வீடுகள் கட்ட மனைகளை விற்றது. அப்போது இயங்கி வந்த அரசு அலுவலகம் அருகிலேயே வணிக வளாகம் ஒன்று அமைக்கப்பட்டது. வணிகர்கள் யாரும் விரும்பாத இடமாகிவிட்ட இந்த வளாகத்தின் மேல் மாடியில்தான் இந்தப் பொது நூலகத்தை அமைத்தார் கள். அனுப்பானடி மக்கள் அவ்வளவு தொலைவு சென்று படித்துவிட்டு வர விரும்பவில்லை. எனவே அனுப்பானடிக் காக ஒரு பொது நூலகத்தை அமைத்துத் தர மக்கள் வேண்டுகிறார்கள்.



– **இரா.கல்யாண சுந்தரம்,**
**மதுரை**

தினமும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் வழிபடும் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் கலைநயம் மிக்க பல மண்டபங்கள் இருந்தாலும், அதைப் பற்றிய தகவல்கள் பலருக்கும் தெரியாது. இதோ சில துளிகள்...

# கலைநயம் மிக்க மண்டபங்கள்!

**அஷ்டசக்தி மண்டபம்** : இம்மண்டபத்தின் இடப்புறத் தூண்களில் கௌமாரி, ரௌமாரி, வைஷ்ணவி, மஹாலக்ஷ்மி சிற்பங்களும், வடப்புறத்தூண்களில் யக்ஞரூபிணி, சியாமளை, மஹேஸ்வரி, மனோன்மணி சிற்பங்களும் இடம்பெற்றிருக்கின்றன. பல அழகான வண்ண ஓவியங்களும், சிலைகளும் இம்மண்டபத்தில் உண்டு.

**மீனாக்ஷி நாயக்கர் மண்டபம்:** அஷ்டசக்தி மண்டபத்தை அடுத்து அமைந்துள்ள இம்மண்டபத்தில் ஆறு வரிசைகளில் 22 அடி நீளத் தூண்கள் 110 நிற்கின்றன. ஒவ்வொரு தூணும் யாளி உருவம் தாங்கி நிற்பது இதன் சிறப்பு. இம்மண்டபத்தின் மேற்குப் பகுதியில் 1008 எண்ணெய் விளக்குகளைக் கொண்ட 25 அடி உயர திருவாட்சி வளைவு அமைக்கப்பட்டுள்ளது. திருவாட்சியின் முன் மேற்கூரையில் சதுர வடிவில் 12 ராசிகளின் அமைப்பு சித்திரிக்கப்பட்டிருக்கிறது.

**முதலிப் பிள்ளை மண்டபம்:** 1963ல் கடந்தை முதலியாரால் கட்டப்பட்ட இம் மண்டபத்தை இருட்டு மண்டபம் என்றும் கூறுவர். இம்மண்டபத்தின் இருபுறங்களிலும் அழகான சிலைகள் செதுக்கி வைக்கப்பட்டுள்ளன.

**ஊஞ்சல் மண்டபம்:** பொற்றாமரைத் தடாகத்தில் மேற்கு மண்டபத்தில் கருங்கற்களால் கட்டப்பட்ட சிறிய மண்டபமே ஊஞ்சல் மண்டபம். இங்குள்ள ஊஞ்சலில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமைதோறும் மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் சுவாமிகளை அமர்த்தி, ஊஞ்சலாட்டி மக்களின் பார்வைக்கு வைப்பர்.

**கிளிக்கூண்டு மண்டபம்:** இம்மண்டபத்தின் மேற்குக் கோடியில் ஒரு பெரிய கூண்டில் கிளிகள் அடைத்து வைக்கப்பட்டிருந்ததால் வந்த காரணப் பெயரே கிளிக்கூண்டு மண்டபமாகும். (இப்பொழுது



அந்தக் கூண்டு அகற்றப்பட்டிருக்கிறது.). இம்மண்டபத்தில் உள்ள ஒரு தூணில், ஒரு யாளியின் சிலை உருவத்தின் வாயில், வெளியில் எடுக்க இயலாத ஒரு உருண்டை கல் பந்து கொண்ட சிற்ப அமைப்பு அனைவரையும் கவரும் வகையில் அமைந்துள்ளது.

**கம்பத்தடி மண்டபம்:** மிகச் சிறப்பான கலையம்சங்கள் கொண்ட மண்டபம் இது. இங்குள்ள ஒரு தூணில் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரரின் திருக்கல்யாணக் காட்சியும், அடுத்துள்ள தூணில் சிவபெருமான் மார்க்கண்டேயனைக் காக்கும் பொருட்டு யமதேவனைக் கொல்லும் காட்சியும், மூன்றாவது தூணில் நடராஜர் உருவமும், நாலாவது தூணில் கைலாச மலையில் சிவபெருமான் பார்வதியுடன் அமர்ந்திருக்க, அம்மலையையே இராவணன் தன் தோளில் தூக்கி நிற்கும் அற்புதக் காட்சியும், ஐந்தாவது தூணில் சக்கரதரர் மற்றும் ரிஷபாரூடர் உருவமும், ஆறாவது தூணில் ஹரிஹர சங்கரநாராயணன் உருவமும், ஏழாவது தூணில் சண்டேஸ்வரர் உருவமும், எட்டாவது தூணில் பிக்ஷாடணர், ருத்திரர், கிருஷ்ணர், அர்ச்சுனர்,



சோமாஸ்கந்தர் ஆகியோரது உருவங்களும் கலையம்சத்துடன் சித்திரிக்கப்பட்டிருப் பதைக் காணக் கண்கோடி வேண்டும்.

**வீரவசந்தராயர் மண்டபம்:** 42 தூண் களடங்கிய இம்மண்டபத்தில் சுந்தரேசப் பெருமானை நோக்கியவண்ணம் ஒரு பெரிய நந்தி உருவச் சிலை அமர்ந்த நிலை யில் இருக்கிறது. இம்மண்டபத்திலும் ஒரு கலைநயத்தோடு அமைக்கப்பட்டிருக்கும் இன்னும் பல சிலைகள் இம்மண்டபத்தை அலங்கரிக்கின்றன.

**மங்கையர்க்கரசி மண்டபம்:** மீனாக்ஷி அம்மன் கோயிலின் 1960-63ம் ஆண்டு திருப்பணியின்போது மாதிரி அம்சமாகக் கட்டப்பட்ட இம்மண்டபத்தில் மங்கை யர்க்கரசி, குலச்சிறையர், கூன்பாண்டியன், ஞான சம்பந்தர் போன்றோர் இடம் பெற்றுள்ளனர்.



ஆயிரங்கால் மண்டபம் என்றபோதிலும் 985 தூண்கள் மட்டுமே உள்ளன.

அலங்கார வளைவு விளக்கு இருக்கிறது.

**ஆயிரங்கால் மண்டபம்:** 1569-ம் ஆண்டில் தளவாய் அரிய நாத முதலியாரால் கட்டப்பட்ட இம்மண்ட பம் ஒரு சிற்பக் களஞ்சியம். ஆயிரங்கால் மண்டபம் என அழைக்கப்பட்டபோதி லும், மொத்தத்தில் 985 தூண்கள் மட்டுமே உள்ளன. இம்மண்டபம் இரண்டு யானை களால் இழுக்கப்படக்கூடிய ரதமாக உரு வகிக்கப்பட்டிருக்கிறது. கண்ணப்ப நாய னார், சர்ப்பம் தீண்டி இறந்த தன் மகன் லோகிதாசனைச் சுமந்து நிற்கும் சந்திரமதி, அரிச்சந்திரர் ஆகியோரது சிலைகள் மிகத் தத்ரூபமாக வடிவமைக்கப்பட்டுள்ளன.

**திருக்கல்யாண மண்டபம்:** ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதத் தில் ஸ்ரீ மீனாக்ஷி அம்மையின் திருக்கல் யாண அரங்கமாக விளங்கி வருகிறது, இம் மண்டபம். இந்த இடத்தின் கூரைப் பகுதி மரச்சிற்பங்களாலும், வண்ண ஓவியங் களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் திருக்கோயி லைத் தரிசிக்க வரும்பொழுது, மண்டபங் களின் கலைநயங்களை ரசிக்கவும் கொஞ்சம் நேரத்தை ஒதுக்குங்கள்.

வாசகர் யோசனை:
**ஜி.பாலகிருஷ்ணன்**




# மதுரை மண்ணில் தங்கம்

மதுரையில் ஜுவல்லரி கடைகள் அதிகம். நகை பட்டறைகளும் அதிகம். தெற்கு ஆவணி மூல வீதி, மேட்டுக் கம்மாளத் தெரு, கான்சா மேட்டுத் தெரு, பச்சரிசிக்காரச் சந்து, மறவர் சாவடி, பூக்காரச் சந்து, வெள்ளியப்பன் சந்து இவற்றில் பெரும்பாலும் நகைக் கடைகளும், பட்டறைகளுமே அமைந்துள்ளன.

இந்த வீதிகளில் ஆண்களும், பெண்களுமாக தினசரி ரொம்பச் சுத்தமாக கூட்டிப் பெருக்கி வருகின்றனர். அவர்களில் எவரும் மாநகராட்சி துப்புரவுப் பணியாளர்கள் அல்ல. அவர்கள் அனைவரும் அந்தத் தெருக்களின் குப்பை மண்ணிலே தங்கம் தேடி எடுப்பவர்கள். சுமார் நூறு குடும்பங்களுக்கு தினசரி வேலையே இதுதான். அவர்கள் வேறு எந்த வேலைக்கும் செல்வதில்லை.

தினசரி கூலி வேலைக்குப் போனால் அங்கு கிடைக்கும் சம்பளத்தைவிட இதில் அதிகமாகவே கிடைக்கிறது என்கின்றனர். என்ன ஒரு வேறுபாடுன்னா... ஒரு நாளைக்கு அதிகமா.தங்கத் தூள் கிடைக்கும். ஒரு நாளைக்கு கொஞ்சமா தங்கத்தூள் கிடைக்கும். அவ்வளவுதான்!

''வீதியடைச்சு கூட்டி சுத்தமாய்ப் பெருக்கிடுவோம். கார்ப்பரேஷன்காரங்க கூட இத்தனை துப்புரவா கூட்ட மாட்டாங்க. கூட்டிப் பெருக்கி குப்பை மண்ணைச் சலிப்போம். காரை மண்ணை எடுப்போம். அதுல ஆசிட் ஊத்திக் கொதிக்க வைப்போம். அந்தக் காரை மண்ணுல ரசமணியைப் போட்டுத் தேய்ப்போம். தங்கத் தூள் எல்லாம் ஒண்ணு கூடிடும். அதைக் கொண்டு போய் வித்துடுவோம். சரி, இந்தத் தங்கத் தூள் எப்படி வருதுன்றீங்களா? காத்துல பாட்டு மிதந்து வர்றாப்ல வருது. நகைக் கடையில் நகையை உரசிப் பார்க்கறாங்க. பட்டறையில் வேலை செய்யறப்ப தங்கம் தூள் ஆவுது. அப்ப காத்துல மிதக்குற தங்கத் தூள் தெரு மணல்ல வந்து படிஞ்சிடுது. எங்களால சலிச்சு கண்டுபிடிக்கப் பட்டு நகைப்பட்டறைக்கே அது மறுபடி போய்ச் சேருது!'' என்கிறார் கமலா.




# தமுஎச-34

* "பாட்டாளியையும் படைப்பாளி யாக்கிய ஒரே இலக்கிய அமைப்பு த.மு.எ.ச.தான். அதற்கு மிகச் சிறந்த உதாரணம் 2009ம் ஆண்டுக்கான சாகித்ய அகாதமி பரிசை வென்ற மேலாண்மை பொன்னுச்சாமி" என்கிறார் பேராசிரியர் அருணன். த.மு.எ.ச.வைத் தோற்றுவித்தவர்களுள் இவரும் ஒருவர்.

* 1975ஆம் ஆண்டு திடீர் நகரில், செம்மலர் பத்திரிகையில் எழுதிய 32 பேரால் திட்டமிட்டு உருவாக்கப்பட்ட த.மு.எ.ச. அமைப்பில் இன்றைக்கு அங்கத்தினர் மட்டும் 20,000 பேர்.

* இந்திய கம்யூனிஸ்ட் கட்சியோடு கொள்கை முரண்பட்டு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆரம்பிக்கப்பட்டபோது இ.க.கட்சியின் இலக்கிய ஏடான 'தாமரை'க்கு ஈடாக மா.க. கட்சியால் முன்னிறுத்தப்பட்டதுதான் 'செம்மலர்' பத்திரிகை.

* 1971ல் நாமக்கல்லைச் சேர்ந்த கு.சின்னப்பபாரதி ஆரம்பித்த செம்மலர் பத்திரிகை 1973, 74களில் சி.பி.எம். கட்சியிடம் ஒப்படைக்கப்பட்டது. அதில் த.மு.எ.ச.வைச் சேர்ந்தவர்களின் படைப்புகள் வெளிவர ஆரம்பித்தன.

* கே.முத்தையா, தி.வரதராஜன்... போன்றோரின் வழிகாட்டுதல்படி 1975ஆம் ஆண்டு மதுரை தமுக்கம் மைதானத்தில் த.மு.எ.ச.வின் முதல் மாநாடு நடைபெற்றது. அதன் பிறகு மூன்று ஆண்டு இடைவெளியில் தவறாது மாநாடு நடத்திய ஒரே இலக்கிய அமைப்பு த.மு.எ.ச.தான்.

* கந்தர்வன், தணிகைச் செல்வன், வேலராமமூர்த்தி, இராஜேந்திரசோழன், மேலாண்மை பொன்னுச்சாமி, தேனி சீருடையான், கு.சின்னப்பபாரதி போன்ற தரமான படைப்பாளிகளை தமிழிலக்கியத்துக்கு த.மு.எ.ச. தந்திருக்கிறது.

* த.மு.எ.ச.வின் திருவண்ணாமலை மாவட்டக் கிளையால் ஆரம்பிக்கப்பட்ட 'கலை இரவு', 'கவிராத்திரி' போன்ற கலை வடிவங்கள், இன்று தமிழ் இலக்கியச் சூழலில் மிகப் பிரபலம்.

* அருணனின் கடம்பவனம், கு.சின்னப்ப பாரதியின் தாகம், டி.செல்வராஜின் மலரும் சருகும், கே.முத்தையாவின் உலைக்களம், ச.தமிழ்ச்செல்வனின் வாலின் தனிமை... என்று சொல்லிக்கொண்டே போகலாம் த.மு.எ.ச.வின் படைப்பு இலக்கியப் பணிகளை. சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற 11வது மாநில மாநாட்டில் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் என்ற பெயர் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் கலைஞர்கள் சங்கம் என்று மாற்றி அமைக்கப்பட்டது.

# இதம் தந்து ரணம் ஆற்றும்







# சைபால்

## BEST SKIN OINTMENT

எரிச்சல் தரும் தீப்புண்ணின் மேல் சைபால் தடவுங்கள். எரிச்சலைப் போக்கி இதம் தரும்.

வெட்டுக்காயம், சொறி சிரங்கு, வேனல் கட்டி, முகப்பரு, சேத்துப்புண், பித்தவெடிப்பு, தேமல் முதலிய சரும வியாதிகளுக்கு சிறந்தது.

PIMPLES



RINGWORM



CRACKS



TOES INFECTION



Mfrs.: **THE SOUTH INDIAN MFG. CO.,** MADURAI - 20.

Ph: 2534108

எப்போதும் வீட்டில் வைத்திருங்கள் **சைபால்** ஒன்றை

## அமரர் கல்கி



# "போங்கள், பகவான் இருக்கிறார்!"

ரொம்ப, ரொம்ப, ரொம்ப, ரொம்ப அவசியமாக சங்கீதாபிமானிகள் படிக்க வேண்டிய புத்தகம் ஒன்று சமீபத்தில் தமிழ் நாட்டில் வெளியாகியிருக்கும் விஷயம் நேயர்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கலாம். புத்தகத்தின் பெயர் "Personalities in Present Day Music" என்பது. ஆசிரியர் பெயர் ஸ்ரீமான் ஈ. கிருஷ்ணையர் பி.ஏ., பி.எல். புத்தகத்துக்கு வேறு சிபாரிசு ஒன்றும் வேண்டியதில்லையென்று நினைக்கிறேன். கலை உலகத்துக்கு ஸ்ரீமான் கிருஷ்ணையர் செய்திருக்கும் அரிய தொண்டுகளை அறியாதவர் யார்? அத்தொண்டுகளுக்கெல்லாம் சிகரம் போன்றது இப்புத்தகம் என்றால் வேறு சொல்ல வேண்டியதில்லையல்லவா?

"ஆனால் இதென்ன? தோழர் கிருஷ்ணையர் சுதேசி சங்கீதத்தைப் பற்றி விதேசி பாஷையில் போய்ப் புத்தகம் எழுதுவானேன்?" என்ற சந்தேகம் எல்லாருக்கும் முதலில் உண்டாகக் கூடும். இது கிருஷ்ணையருடைய தவறல்ல. இங்கிலீஷ் பத்திரிகை ஒன்றின் ஆசிரியர் தமது பத்திரி

---

### பரிதிமாற் கலைஞர் நினைவு இல்லம்!

மதுரை, விளாச்சேரியில் இருக்கிறது பரிதிமாற் கலைஞர் வாழ்ந்த வீடு. 2007ல் அதனை நினைவு இல்லமாகப் புதுப்பித்துள்ளது தமிழக அரசு. சூரியநாராயண சாஸ்திரியார் என்கிற தன்னுடைய இயற்பெயரை, பரிதிமாற் கலைஞர் என மாற்றிக் கொண்டவர். தமிழுக்கு 'செம்மொழி' அந்தஸ்து வேண்டும் என்று முதன்முதலாகக் குரல் கொடுத்த அறிஞர் இவர்.

❋ பரிதிமாற்கலைஞர்



திருப்பரங்குன்றம் செல்லும் சாலையிலிருந்து சற்று விலகி உள்ளது விளாச்சேரி. சாலை வசதி சற்று குறைவு. பரிதிமாற் கலைஞர் நினைவு இல்லம் வரைக்குமாக சாலைகளைச் செப்பனிட்டு அகலப்படுத்தி வருகிறது தமிழக அரசு. மெயின் ரோட்டிலிருந்து நினைவு இல்லம் வரைக்குமாக தொண்ணூறு லட்ச ரூபாய் திட்ட மதிப்பீட்டில் சாலை விரிவாக்கம் செப்பனிடப்பட்டு வருகிறது.



❋ பரிதிமாற்கலைஞர் வாழ்ந்த வீடு

- திருநாவு

கைக்கு எழுதச் சொல்லிக் கேட்டுக் கொண்டதின் பேரில் எழுதிய கட்டுரைகளாதலால், ஆங்கிலத்தில் எழுதினார். அக்கட்டுரைகளைத் திரட்டிச் செப்பனிட்டுச் சிறந்த முன்னுரை ஒன்று சேர்த்துப் புத்தகமாக வெளிக்கொணர்ந்திருக்கிறார். ஆகையால், தவறு அவரை முன்னமே பயன்படுத்திக் கொள்ளாத தமிழ்ப் பத்திரிகைகளினுடையது என்று வேண்டுமானால் சொல்லலாம்.

கர்நாடக சங்கீதத்தின் தற்கால நிலைமை, சங்கீதத்தைத் தராதரமறிந்து அனுபவிக்க வேண்டிய முறை, சங்கீத அபிவிருத்திக்குரிய யோசனைகள் முதலியவை முன்னுரையில் அடங்கியிருக்கின்றன. பின்னர் நூலில், ஸ்ரீமான்கள் அரியக்குடி இராமானுஜ அய்யங்கார், டைகர் வரதாச்சாரியார், பல்லடம் ஸஞ்சீவி ராவ், முத்தையா பாகவதர், வீணை தனம், முசிரி சுப்பிரமணிய அய்யர், வேங்கடசாமி நாயுடு, செம்பை வைத்தியநாதய்யர், ஸரஸ்வதிபாய், தக்ஷிணாமூர்த்தி பிள்ளை, சுப்பிரமணிய பிள்ளை, நாதசுரம் வீருசாமிப் பிள்ளை, வேதாந்த பாகவதர், அழகநம்பியாப்பிள்ளை, பரதநாட்டியம் கௌரி, முத்து ரத்னாம்பா, கல்யாணி குமாரிகள், பாலஸரஸ்வதி ஆகிய இவர்களுடைய கச்சேரிகள், காலட்சேபங்களின் இயல்பும், தராதரங்களும், அவர்களுடைய வாழ்க்கைக் குறிப்புகளும் அடங்கிய கட்டுரைகள் காணப்படுகின்றன.

நேயர்களே! மேற்படி புத்தகம் ஒன்று உங்களுக்கு உண்மையில் வேண்டுமென்றால், முந்திக் கொள்ள வேண்டுமென்று எச்சரிக்கை செய்கிறேன். அப்புறம் கிடைப்பது கஷ்டமாகிவிடலாம்.

ஸ்ரீமான் ஈ.கிருஷ்ணையருக்கு சங்கீத உலகில் எத்தனை நண்பர்கள் உண்டு என்பது கணக்கிட முடியாத விஷயம். பத்திரிகைக்காரர்கள், கிரிடிக்குகள் முதலியோர் வேறு இருக்கின்றனர். இவர்கள் எல்லாருக்கும் ஸ்ரீமான் கிருஷ்ணையர் நாளடைவிலாவது ஒவ்வொரு புத்தகம் இலவசமாகக் கொடுத்தே தீர வேண்டும். அப்புறம், விலை கொடுத்து



வாங்க விரும்பும் சங்கீதாபிமானிகளுக்குப் புத்தகம் கிடைக்காமல் போய்விடக் கூடும். ஆகவே முந்திக் கொள்ளுங்கள்.

புத்தகம் வாங்குங்கள்: படியுங்கள். சங்கீதாபிமானிகளில் இங்கிலீஷ் தெரிந்தவர் ஒவ்வொருவரும் இப்புத்தகத்தைப் படித்தேயாகவேண்டும். ஆனால், பின்னர் கச்சேரி, அல்லது காலக்ஷேபம், அல்லது பரதநாட்டியத்துக்குப் போகும்போது ஸ்ரீமான் கிருஷ்ணையரின் புத்தகத்தை அடியோடு மறந்துவிட்டுப் போங்கள். அங்கு போய் உட்கார்ந்து ''இந்தப் பாடகரைப் பற்றிக் கிருஷ்ணையர் என்ன சொல்கிறார்?'' என்று யோசித்துக் கொண்டிருந்தீர்களானால், கச்சேரியை அனுபவித்தது ஏனெனில் பாலஸரஸ்வதியைப் பற்றி அவர் எழுதியுள்ள கட்டுரையின் ஆரம்பத்தில் 'பரதநாட்டியக் கலைக்கு அவசியமான கவர்ச்சி தரக்கூடிய உருவத்தை அவர் பெற்றிராத போதிலும்...' என்று குறிப்பிடுகிறார். பால ஸரஸ்வதியின் நாட்டியம் பார்ப்பதற்கு முன் இதைப் படித்திருந்தால், ''அவருடைய உருவத் தோற்றம் சரியாயில்லை'' என்பதுதான் முன்னால் நின்றிருக்குமேயொழிய, கலையின் மேன்மையில் மனம் பூரணமாய் ஈடுபட்டிருக்க முடியாதல்லவா? ஆகையினால்தான் 'படியுங்கள், ஆனால், கச்சேரிக்குப் போகும் போது மட்டும் மறந்து விடுங்கள்' என்று உங்களுக்கு நான் எச்சரிக்கை செய்வது. ''சரிதான்; ஆனால், உம்முடைய

**மதுரையில் பஞ்சபூதத் தலங்கள்**

* மதுரை மீனாட்சி அம்மன் கோயில்- ஆகாயத்தலம்
* முக்தீஸ்வரர் கோயில்-வாயுத்தலம்
* செல்லூர் திருவாப்புடையார் கோயில்-நீர்த்தலம்
* இம்மையில் நன்மை தருவார் ஆலயம்-பூமித்தலம்
* தென் திருவாலவாய ஸ்வாமி கோயில்- அக்னித்தலம்.



- எஸ்.ஸ்வேதா, மதுரை

போலத்தான். ஓர் உதாரணம் சொல்கிறேன். சுமார் ஒரு வருஷத்துக்கு முன்பு பரத நாட்டியக் கலைக்கு வரவிருந்த ஆபத்தை நீக்குவதற்கு ஸ்ரீமான் கிருஷ்ணையர் எடுத்துக்கொண்ட முயற்சி அனைவரும் அறிந்ததே. அவருடைய பிரசாரத்தினால் தான் பரத நாட்டியம் பார்க்கலாம் என்ற தைரியம் என்னைப் போன்ற பலருக்கு ஏற்பட்டது. ஆனாலும் இந்தப் புத்தகம் வெளியாவதற்கு முன்பு பாலஸரஸ்வதியின் பரத நாட்டியம் பார்த்துவிட்டது குறித்து நான் மகிழ்ச்சியேயடைகிறேன். அபிப்பிராயங்கள் மட்டும்...?'' கேட்க வேண்டியதில்லை. கிருஷ்ணையருக்குச் சொன்னதுதான், ''கர்நாடக''த்துக்கும். மற்ற சமயங்களில் படிக்கலாம், பேசலாம், வாதிடலாம். ஆனால் கச்சேரிகளுக்குப் போகும்போது எல்லா அபிப்பிராயங்களையும் மறந்து, ''கச்சேரியை ரசிக்க வேண்டும்'' என்ற ஒரே கருத்துடன் போங்கள். அப்புறம் பகவான் இருக்கிறார்!

**- 'ஆனந்தவிகடன்'**



# அதென்ன லவ் கெமிஸ்ட்ரி?

**ல**வ்வுக்கு இலக்கிய, புராணக் காலத்திலிருந்து ஹிஸ்டரி உண்டு. அது என்ன லவ் கெமிஸ்ட்ரி?

'பெரொமோன்ஸ்' என்பது நம் உடலிலிருந்து வெளிப்படும் ஒரு வகையான வாசனை. அது தான் ஓர் ஆணை நோக்கி ஒரு பெண்ணோ அல்லது பெண்ணை நோக்கி இன்னோர் ஆணோ ஈர்க்கப்படவும், விலகிச் செல்லவும் காரணமாக இருக்கிறது. இதைத்தான் லவ் கெமிஸ்ட்ரி என்று சொல்கிறார்கள். ஒரு திருமணம் வெற்றி பெறுவதில் இந்த கெமிஸ்ட்ரிக்கு முக்கியப் பங்கு உண்டு.

அதே நேரத்தில், 'பெரொமோன்ஸ்' லவ் கெமிஸ்ட்ரி இருந்துவிட்டாலே ஒரு கணவன் - மனைவியின் வாழ்க்கை மிகச் சிறப்பாக அமைந்துவிடும் என்றும் சொல்லிவிட முடியாது. திருமணத்தின் வெற்றிக்கு உடல் ரீதியான பொருத்தம் மட்டுமில்லாமல் மனோரீதியான பொருத்தமும் முக்கியம். ஆகவே, இரண்டு பேர் திருமணம் செய்ய முடிவு செய்தபிறகு, அவர்கள் மனம் விட்டுப் பேசிப் பழகவும், புரிந்து கொள்ளவும் போதிய அவகாசம் அவசியம்.

**டாக்டர் விஜய் நாகஸ்வாமி**

**அ**ருணும், வசந்தியும் பெற்றோர்கள் பார்த்து திருமணம் செய்துவைக்கப்பட்ட தம்பதி. திருமணத்துக்குப் பிறகு அருணுக்குத் தனிக்குடித்தனம் போக விருப்பமில்லை. அவனுக்குப் பள்ளியில் படிக்கும் ஒரு தங்கையும் உண்டு. அருண், தினமும் ஆஃபீஸிலிருந்து வர இரவு மணி ஏழரையாகிவிடும். வீட்டுக்கு வந்ததும் தன்

அப்பாவிடம் கொஞ்ச நேரம் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பது அவனது வழக்கம். அப்போது அவனது அம்மாவும் கூட வந்து உட்கார்ந்துகொள்வாள். அதன் பிறகு டின்னர். டைனிங் டேபிளில் தங்கையுடன் பேசியபடியே சாப்பிடுவான். அப்புறம் அண்ணனும், தங்கையும் கொஞ்சநேரம் டீ.வி. பார்த்துக்கொண்டிருப்பார்கள். அதற்குள் தான் சாப்பிட்டுவிட்டு, மற்ற கிச்சன் வேலைகளை முடித்துவிட்டுத் தூங்கப் போய்விடுவாள் வசந்தி. கொஞ்ச நேரம் ஏதாவது படித்துவிட்டு அருண் தூங்கப் போகும்போது, வசந்தி அசந்து தூங்கிக் கொண்டிருப்பாள்.

காலையில் வசந்தி சீக்கிரம் எழுந்து வீட்டு வேலைகளைக் கவனிப்பாள். அருண், ஏழு மணி வரை தூங்கிக் கொண்டிருப்பான். அப்புறம் எழுந்து காஃபி, நியூஸ் பேப்பர், குளியல்... இன்ன பிறவற்றை முடித்துவிட்டு, டைனிங் டேபிளுக்கு வருவான். ரெடியாக இருக்கும் பிரேக் ஃபாஸ்ட்டை முடித்துக்கொண்டு ஆபீஸுக்குப் புறப்படுவான்.



பல சமயங்களில், ''போங்க! உங்க மேல எனக்குக் கோபம் கோபமா வருது! நீங்க பிறந்ததுலேயிருந்து உங்க அப்பா, அம்மா கூடவேதான் இருக்கீங்க. உங்க தங்கையும் உங்க கூடத்தான் இருக்கா. நான் உங்க பொண்டாட்டிதானே? என்கூட கொஞ்ச நேரம் ஜாலியா பேசிக்கிட்டு இருக்கக் கூடாதா?'' என்று அடிக்கடி வசந்தி கேட்க ஆரம்பித்தாள்.

ஒரு பார்ட்டிக்குச் சென்றிருந்த சமயம் யதேச்சையாக அருணை நான் சந்தித்தேன். நான் ஒரு மனவியல் டாக்டர் என்று தெரிந்ததும் அருண், சமீபகாலமாக வசந்தியிடம் தான் காணும் மாற்றங்களைப் பற்றிச் சொன்னான். ''வசந்தி என்னுடைய மனைவி! நான் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்றுதான் நினைக்கிறேன். எனக்கு நேரமே கிடைப்பதில்லை. ஒய்ஃப் என் அன்பைப் புரிந்துகொள்வதே இல்லை'' என்று வருத்தத்துடன் சொன்னான்.

> **"ஒய்ஃப் என் அன்பைப் புரிந்துகொள்வதே இல்லை"**

''தன் கணவன் தனக்காகச் சிறிது நேரம் தினமும் ஒதுக்க வேண்டும் என்று வசந்தி நினைப்பதில் சிறிது கூடத் தவறில்லையே! அது எந்த ஒரு பெண்ணானாலும் இருக்கக்கூடிய நியாயமான எதிர்பார்ப்புதானே? அதைச் செய்து பார்த்து, அவளைத் திருப்திப் படுத்தினால் என்ன?

'நேரமே கிடைக்கவில்லை' என்பது உன்னுடைய இயலாமைக்கு நீயாகவே அளித்துக் கொள்ளும் சமாதானம். உன்னுடைய நேரத்தைச் சிறிது அட்ஜஸ்ட் செய்துகொண்டால் வசந்திக்காக தாராளமாக உன்னால் நேரம் ஒதுக்க முடியும். அதற்கு என்ன செய்யலாம் என்று மனம் திறந்து யோசி; உன்னால் அதற்கு நல்லதொரு தீர்வுகாண முடியும்'' என்றேன்.

"போங்க! உங்க மேல எனக்குக் கோபம் கோபமா வருது!"

"ஆஃபீஸிலிருந்து வீடு திரும்பியதும் சாப்பாட்டு நேரம், டீ.வி. பார்ப்பது உள்ளிட்ட எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்து, ஒரு பதினைந்து, இருபது நிமிடம் வசந்தியை அழைத்துக்கொண்டு காலாற ஒரு வாக்கிங் போ. இரண்டு பேரும் ஏதாவது பேசுங்கள்; இல்லையெனில் வசந்தி பேசுவதைக் கேட்டுக் கொண்டிரு; அந்த வாக்கிங் நேரம் உங்களுக்கே உங்களுக்கானது என்பதை அவளுடைய மனத்தில் ஆழமாகப் பதிய வை'' என்றும் கூறினேன். தினசரி வாக்கிங் அவர்களது வாழ்க்கையில் ஒரு புது அத்தியாயத்தைத் துவக்கி வைத்தது.



**இன்றைய சமூகத்தில், திருமணம் செய்து கொள்ளும் இளைஞர்கள் பலரும் தன் மனைவியுடன் நேரத்தைச் செலவிட்டால் அதைத் தன் பெற்றோர்களும், உடன்பிறந்தவர்களும் தவறாக எடுத்துக்கொண்டு விடுவார்கள் என்று நினைத்து, மனைவிக்காக நேரம் ஒதுக்க விரும்பினாலும், அப்படிச் செய்யத் தயங்குகிறார்கள். இதற்கு நமது கலாசாரமும் ஒருவிதத்தில் காரணம். ஆனால், தங்கள் வேலைகளையும், நேரத்தையும் புத்திசாலித்தனமாக யோசித்து கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்துகொண்டு விட்டால் அது மகிழ்ச்சிகரமான திருமண வாழ்க்கைக்கு ஒரு பலமான அஸ்திவாரமாக அமையும்.**

(அழைப்பு தொடரும்)

எழுத்தாக்கம்: **எஸ். சந்திரமௌலி**

குறிப்பு: இத்தொடரில் இடம்பெற்றுள்ள படங்களுக்கும், மனிதர்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!

காட்டைத் திருத்த வேண்டுமா? மூட்டை தூக்க வேண்டுமா? தண்டவாளம் அமைக்க வேண்டுமா? பாலம் கட்ட வேண்டுமா? விவசாயத்துக்கு ஆட்கள் வேண்டுமா? உங்கள் வீட்டுக் குட்டிப் பாப்பாவை



# கறுப்பு

பொறுப்பாகவும் கவனமாகவும் பார்த்துக்கொள்ள ஆயா வேண்டுமா? கூப்பிடு ஆப்பிரிக்க அடிமைகளை.

கொஞ்சமும் சளைக்காமல் உலகம் முழுவதற்கும் அடிமைகளை ஏற்றுமதி செய்த தேசம் ஆப்பிரிக்கா.

எனக்கு உனக்கு என்று வெவ்வேறு இனக்குழுத் தலைவர்கள் ஆப்பிரிக்காவை பிய்த்துப் பிறாண்டிக் கொண்டிருந்த காலகட்டம் அது. யாருக்கு எந்தப் பகுதி கிடைக்கிறதோ அந்தப் பகுதிக்கு அவரே ராஜா. ஒவ்வொரு இனக்குழுவும் மற்றொரு இனக்குழுவுடன் மோதிக் கொண்டே இருக்கும். ஐரோப்பியர்களுக்கு இது மிகவும் வசதியாகிப் போனது. பொன், பொருளுக்கு ஆசைப்பட்டு சில ஆப்பிரிக்கர்களே தங்கள் இன மக்களை வளைத்துப் பிடித்து அடிமைகளாக விற்று வந்தனர்.

அட்லாண்டிக் அடிமை வர்த்தகம் என்று சரித்திரம் இதைப் பதிவுசெய்திருக்கிறது. எனில், ஆப்பிரிக்காவில் இருந்து அட்லாண்டிக் பெருங்கடலை ஒட்டியுள்ள நாடுகளுக்கு (பிரேஸில், போர்ச்சுகல், பிரான்ஸ், இங்கிலாந்து, ஸ்பெயின் போன்ற நாடுகள்) அடிமைகளை விற்கும் வியாபாரம் என்று பொருள். மேற்கு ஆப்பிரிக்காவில் இருந்தும் மத்திய ஆப்பிரிக்காவில் இருந்தும் பல மில்லியன்கணக்கான அடிமைகள் ஏற்றுமதி செய்யப்பட்டனர். 1492 தொடங்கி 1888 வரையிலான காலகட்டத்தில் மொத்தம் 12 மில்லியன் ஆப்பிரிக்கர்கள் அமெரிக்காவுக்குக் கப்பலில் அனுப்பி வைக்கப்பட்டனர்.




1750ம் ஆண்டு காம்பியாவில் பிறந்த குண்ட்டா கிண்ட்டே அவர்களுள் ஒருவர். புதிதாக ஒரு குழந்தை ஆப்பிரிக்காவில் பிறந்திருக்கிறது என்றால் புதிதாக ஓர் அடிமை உருவாகியிருக்கிறான் என்று அர்த்தம். இறைவனால் அருளப்பட்ட ஓர் அற்புத வாய்ப்பு. குண்ட்டா வாலிபப் பருவத்தை அடைந்ததுமே அவனை வளைத்துப் பிடித்தார்கள். பன்றிகளைப் பிடிக்கும் அதே முறைதான்.

பிடிபட்ட குண்ட்டாவின் கைகளில் சங்கிலியை மாட்டி, அமெரிக்காவில் கொண்டு வந்து இறக்கினார்கள். முன்னரே பண்ணையடிமைகளாக இருக்கும்

# என்றொரு நிறம்!

பல லட்சக்கணக்கான கறுப்பின அடிமைகளுள் ஒருவராக குண்ட்டா மாறினார். அமெரிக்கா என்று ஒரு தேசம் உருவாவதற்குப் பல நூற்றாண்டுகள் முன்பே அடிமை முறை அங்கே அழுத்தமாக வேரூன்றி விட்டது. இதுபற்றி முதன்முறையாக நமக்குத் தெரியவந்தது 1619ம் ஆண்டு. மெக்ஸிகோவை நோக்கிச் சென்று கொண்டிருந்த ஒரு ஸ்பானிஷ் கப்பல் மீது நடுக்கடலில் போர் தொடுத்தது ஒரு டச்சுக் கப்பல்





* அலெக்ஸ் ஹெய்லி

(வெள்ளைச் சிங்கம் என்று பெயர் வைத்திருந்தார்கள்). பிடிபட்ட கப்பலில் இருந்து 20 ஆப்பிரிக்க அடிமைகளை அப்படியே தூக்கி தங்கள் கப்பலில் வைத்துக் கொண்டார்கள். இந்த இருபது பேரிடம் இருந்து தொடங்குகிறது அடிமை வர்த்தகம்.

விர்ஜீனியாவில் உள்ள ஜேம்ஸ் டவுன் பகுதிக்குதான் அடிமைகள் முதலில் அழைத்து வரப்பட்டனர். சரித்திரத்தில் பதிவாகியுள்ள முதல் கறுப்பின அடிமை ஜான் கேஸர். 1654ல் இவர் நீதிமன்றம் சென்றார். 'என்னை என் எஜமானர் மிகவும் கொடுமைப்படுத்துகிறார். தயவுசெய்து விடுதலை செய்யுங்கள்.' இவரது எஜமானரும் வழக்குத் தொடுத்திருந்தார். 'நான் ஒண்ணும் சும்மா துன்புறுத்தவில்லை. ஜானை காசு கொடுத்து வாங்கியிருக்கிறேன். இவன் என் அடிமை. என்னை எதிர்த்து எப்படி இவன் வழக்குத் தொடுக்கலாம்? நீதி இருக்கிறதா அல்லது செத்துப் போய்விட்டதா?' இரு தரப்பு வாதங்களையும் ஊன்றிக் கவனித்த நீதிபதி இப்படி ஒரு தீர்ப்பை வழங்கினார். 'இதோ பார் ஜான் கேஸர், நீ ஓர் அடிமை. நீ உன் எஜமானனின் உடைமை. வாழும் காலம் முழுவதும் ஒழுங்கு மரியாதையாக உன் எஜமானனுக்குச் சேவை செய்யக் கடவது.'

இந்தப் பின்னணியில் குண்ட்டா கிண்ட்டே கைமாறிக்கொண்டே இருந்தார். குண்ட்டாவும் அவர் பிற்காலச் சந்ததியினரும் அடிமைகளாக இருந்து அனுபவித்த துயரங்களின் தொகுப்பே ரூட்ஸ். 1976ம் ஆண்டு வெளிவந்த இதை எழுதிய அலெக்ஸ் ஹெய்லி, குண்ட்டாவின் சந்ததியைச் சேர்ந்தவர். தமிழில் இந்நாவல் ஏழு தலைமுறைகள் என்னும் பெயரில் வெளிவந்துள்ளது.




பொறியியல் முடித்து இரண்டு வருடங்களாகியும் வேலை கிடைக்காமல் இருப்போர், தமிழ்நாட்டில் மட்டும் இருபதாயிரத்துக்கும் மேல். இந்த வருடம் கிட்டத்தட்ட இரண்டு லட்சம் பேர் பொறியியல் படித்து வெளியே வர இருக்கிறார்கள். அதில் ஐம்பது சதவிகிதத்தினருக்கு வேலை கிடைத்தால் பெரிய விஷயம். வாய்ப்புகள் சுருங்கச் சுருங்க போட்டி அதிகமாகிறது. ஆனால் இது தற்காலிகச் சூழல்தான். சில மாதங்களில் நிலைமை மாறக்கூடும். ஒரு நேர்முகத் தேர்வுக்குப் போய் வந்தவுடன் அந்த அனுபவத்தை டயரியில் எழுதி வையுங்கள். அடுத்த போட்டிக்குப் போகும் முன்பு எடுத்துப் பாருங்கள்.

# நேருக்கு நேர்!

**ச**மீபத்தில் விருதுநகரில் கார்த்திகேயன் என்ற இளைஞர் என்னைச் சந்தித்தார். ''ஸார் கடந்த மூன்று வருடங்களில் 33 இன்டர்வ்யூ சென்று வந்திருக்கிறேன். ஆனால், இதுவரை வேலை கிடைக்கவில்லை. எழுத்துத் தேர்வை நன்றாகத்தான் எழுதுகிறேன். அதேபோல் நேர்முகத் தேர்விலும் நன்றாகத்தான் செய்வதாக நினைக்கிறேன். ஆனால் எங்கே தவறிப் போகிறேன் என்பதே தெரியவில்லை'' என்று புலம்பினார் அவர்.

**மா.கா.பா பாண்டியராஜன்**

நல்ல வழிகாட்டுதலாக இருக்கும்.

இன்றைய நிலையில் பெரிய நிறுவனங்கள், ஊழியர்கள் தேர்வை எங்களைப் போன்றவர்களிடம் கொடுத்து விடுகின்றன. எங்களுடைய அளவுகோல்கள்படி தேர்ந்தெடுப்போமே தவிர வேறு எந்த அழுத்தத்துக்கும் இடம் கொடுக்க மாட்டோம். ஒரு வேலைக்கு நீங்கள் மனு போடுகிறீர்கள் என்றால் பயோடேட்டா தயாரிப்பிலிருந்து, இறுதியில் நேர்முகத் தேர்வில் கலந்து கொள்வது வரை, சில சின்னச் சின்ன விஷயங்களை

ஒழுங்காகச் செய்தாலே, பெரிய திருப்பங்கள் வரும். அப்படிப்பட்ட செக் லிஸ்ட்டைப் பார்ப்போமா?

**பயோடேட்டா (ரெஸ்யூம்):**

இதில் ஸ்பெல்லிங் மிஸ்டேக், இலக்கணப் பிழை இல்லாமல் பார்த்துக் கொள்ளவும். ரெஸ்யூம் தயாரித்தவுடன், நண்பர்களிடம் கொடுத்துப் படித்துப் பார்க்கச் சொல்லுங்கள். உங்கள் கண்களுக்குத் தெரியாத தவறுகள் அவர்கள் கண்களுக்குத் தெரியலாம். இப்போதைய முகவரி, இ.மெயில், ஃபோன் நம்பர் ஆகியவற்றைச் சரியாகப் போடவும். படிப்பு, அனுபவங்களைக் காலவரிசைப்படி போட வேண்டும். தாறுமாறாகப் போட வேண்டாம். அனுபவங்களைப் போடும்போது, தற்போது பணிபுரியும் நிறுவனத்தையும் குறிப்பிடுங்கள். பயோடேட்டா format கச்சிதமாக இருக்க வேண்டும். எழுத்துக்கள் (fonts) படிப்பதற்கு வசதியாக இருக்க வேண்டும். தாளின் இருபுறமும் பயோடேட்டாவை டைப் செய்ய வேண்டாம். மிக, மிக முக்கியமான விஷயம்,references போடுவதில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். யாரைக் குறிப்பிடுகிறீர்களோ, அவர்களிடம் இதுபற்றி முன்னரே பேசி அனுமதி வாங்கி விடவும். பயோடேட்டா சுருக்கமாக இருக்க வேண்டும்.

**எழுத்துத் தேர்வு:** மறுநாள் தேர்வை நினைத்துப் பயந்து தூங்காமல் இருக்க வேண்டாம். முக்கியமான பாய்ண்டுகளைத் தனி நோட்டில் எழுதி அவ்வப்போது பார்த்துக் கொள்ளவும். கேள்வித் தாளை வாங்கியவுடன் அதில் உள்ள வழிகாட்டுதல்களை நன்றாகப் படிக்கவும். வளவளவென்று எழுதாமல் நச் சென்று பாய்ண்டுகளோடு எழுத வேண்டும். கையெழுத்து படிப்பது போல இருக்கட்டும்.

**நேர்முகத் தேர்வுக்கு முன்னால்:** எந்த நிறுவனத்தின் நேர்முகத் தேர்வுக்குப் போகிறீர்களோ அந்த நிறுவனத்தின் வலைத்தளத்துக்குப் போய், அதைப் பற்றி நன்கு தெரிந்து வைத்துக் கொள்ளுங்கள். நிறுவனத்தின் முகவரியை ஒருமுறைக்கு, இருமுறை பார்த்து, உங்கள் வீட்டிலிருந்து அங்கு செல்வதற்கு எத்தனை நேரம் பிடிக்கும் என்பதையும் கணித்துக் கொள்ளுங்கள். நீங்கள் எந்தவிதத்தில் அந்த வேலைக்குத் தகுதியானவர் என்பதைச் சொல்ல இரண்டு பாய்ண்டுகளைத் தயாரித்துக் கொள்ளுங்கள். ''உங்கள் வாழ்க்கையின் லட்சியம்?'' என்ற கேள்வி வரும். அதற்குத் தெளிவான பதிலை நீங்கள் சொல்ல வேண்டும். பயோடேட்டாவில் சொல்லப்

**"ஒரு நேர்முகத் தேர்வுக்குப் போய் வந்தவுடன் அந்த அனுபவத்தை டயரியில் எழுதி வையுங்கள். பின்னர் அது உபயோகப்படும்!"**






வங்கதேசத்தில் சிட்டகாங் அருகே உள்ளது ஜோப்ரா என்னும் கிராமம். இந்தக் கிராமத்தில் உள்ளவர்களுக்கு மூங்கில் கூடை, கட்டில் போன்றவற்றைச் செய்வது தான் தொழில். ஆனால் பல சமயங்களில் மூங்கில் வாங்கப் பணம் இல்லாததால் கந்து வட்டிக்காரர்களிடம் பணம் வாங்க வேண்டியிருக்கும். இதன் காரணமாக என்ன சம்பாதித்தாலும் அவர்கள் வறுமையிலேயே வாடவேண்டியிருந்தது. சிட்டகாங் பல்கலைக்கழகத்தில் பொருளாதாரப் பேராசிரியராக இருந்த முகமது யூனஸ், அந்த மக்களுடைய வேதனைகளைத் தீர்க்க என்ன வழி என்று யோசித்தார். தன் கைக் காசிலிருந்து நாற்பத்திரண்டு பெண்களுக்குக் கடன் கொடுத்தார். மிகக் குறைந்த வட்டி; அந்தப் பணம் ஒழுங்காகத் திரும்பி வந்தது. மூங்கில் வேலை செய்யும் பெண்கள் முகத்தில் சிரிப்பைப் பார்க்க முடிந்தது. கஷ்டப்படும் இப்படிப்பட்ட தனிநபர்களுக்கு புராதனமான வங்கிகள் பல காரணங்களால் கடன் கொடுப்பதில்லை. வறுமையை ஒழித்துக்கட்ட வேண்டுமென்றால் நலிந்த பிரிவினருக்கு சுயதொழில் செய்ய, மற்ற செலவுகளை ஈடுகட்ட தாராளமாகக் கடன் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில், ஜனதா வங்கி என்ற வங்கி மூலம் 28,000 பேர்களுக்குக் கடன் வசதி செய்து தந்தார் யூனஸ். நாளடைவில் ஜனதா வங்கி, கிராமின் (கிராம) வங்கி,என்று புதுப் பெயர் சூட்டிக் கொண்டது. இன்று வங்க தேசத்தில் கிராமின் வங்கி உதவியால், கடன் பெற்று முன்னேறியவர்களின் எண்ணிக்கை 75 லட்சம். இந்தச் சாதனைக்குப் பின்னால் கடும் சவால்கள் இருந்தன என்றால் அது மிகையில்லை. கடன் பெற்றவர்களில் 94 சதவிகிதம் பெண்கள்தான். துவக்கக் கூட்டத்தில் சில பிற்போக்குவாதிகள் பெண்கள் சுயமாகச் செயல்படுவதைத் தடுக்கும் நோக்கில், ''முஸ்லிம் பெண்கள் கிராமின் வங்கியில் கடன் வாங்கக் கூடாது. வாங்கினால், மயானத்தில் அவர்களுக்கு இடம் மறுக்கப்படும்' என்றெல்லாம் பயமுறுத்தினர்.

இன்று வங்கதேசத்தின் பொருளாதாரத்தை நிர்ணயிக்கும் அளவுக்கு பிரமிப்பூட்டும் கட்டுமானத்தோடு எல்லாத் துறைகளிலும் கால்பதித்திருக்கிறது கிராமின் வங்கி. முகமது யூனஸுக்கும் அந்த வங்கிக்கும் சேர்த்து நோபல் பரிசு வழங்கப்பட்டது. தனக்குக் கிடைத்த பரிசுப் பணத்தை, குழந்தைகளின் ஊட்டச்சத்துத் திட்டத்துக்குக் கொடுத்து விட்டார் யூனஸ்.

பட்டுள்ள விவரங்களை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

நேர்முகத் தேர்வில்: *கண்களை உறுத்தாத உடையுடன் இருபது நிமிடங்களுக்கு முன்னால் நிறுவனத்துக்குச் சென்று விடுங்கள். கேள்வி தெரியவில்லை என்றால் 'எக்ஸ்க்யூஸ்மீ' என்று சொல்லி மீண்டும் கேட்கவும். வாக்குவாதம் செய்ய வேண்டாம். ஜோக் அடித்தால் சத்தமாகச் சிரிக்க வேண்டாம். வெளியே வரும் போது, ''எனக்கு வாய்ப்பு கொடுத்தால் உண்மையாக உழைப்பேன். நன்றி'' என்று சொல்லி கதவைச் சத்தமிடாமல் தாளிட்டு வரவும்.*

*(வெளிச்சம் வீசும்)*

எழுத்தாக்கம்: **ஸ்ரீநி**



''எங்கப்பா இறக்கும் போது நிம்மதியா, சந்தோஷமா கண்ணை மூடினார்...''

''எல்லாக் கடமைகளையும் முடிச்சிட்டுப் போனதனாலயா?''

''ஊஹூம்... எல்லாக் கடன்காரங்களையும் ஏமாத்திட்டுப் போனதனால!''

- மதுரை பால.கோவிந்தராஜ்.



''நேத்து ரேடியோல என் பாட்டு ப்ராட்காஸ்ட் ஆனப்போ, நிலையத்துல கரண்ட் கட் ஆகி 'அபஸ்வரமா' போச்சு!''

''பரவாயில்லை, 'பழி'யை ரேடியோவே ஏத்துக்கிச்சுன்னு சொல்லுங்க.''

- வெ.சீதாராமன், சென்னை-5

## பாம்பு நகர்




''நாகப்பன் நகர்னு பிளாட் போட்டிருக்கீங்களே, யார் அது நாகப்பன்?''

''ஹி... ஹி... இந்த ஏரியாவுல பாம்பு அதிகம்.''

– அ.பேச்சியப்பன், ராஜபாளையம்.



★ அரசியல் டானிக்!

● சி.இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி

? ''உலகில் இதுவரை எந்தப் போர் நிறுத்தத்திலும் இரு தரப்பில் ஒரு தரப்பினர் ஆயுதங்களைக் கீழே போட வேண்டுமென்று, இந்தியாவைத் தவிர வேறு எவரும் சொன்னதில்லை!'' என்கிறாரே வைகோ?

! இரண்டு தேசங்களுக்கிடையில் நடக்கும் போர் என்பது வேறு; பிரிவினைவாதத்துடன் கூடிய உள்நாட்டு பயங்கரவாதத் தாக்குதல் என்பது வேறு. இந்திய அரசின் நிலைப்பாடு சரியானது. இதில் வைகோவுக்குக் குழப்பம் இல்லை. மக்களைக் குழப்புவது மட்டுமே அவர் நோக்கம்.

● பா.இசக்கிமுத்து, வெள்ளாளைக் கோட்டை ❑

? சமத்துவபுரங்களை உருவாக்கிய கலைஞர் ஆட்சியில், கிராமங்களில் உள்ள சுடுகாட்டு தகனமேடை கல்வெட்டில் 'தேவர் மயானம்', 'ஆதி திராவிடர் மயானம்' என்று எழுதப் பட்டு வருவது எதைக் காட்டுகிறது?

★ உரிமையின் துஷ்பிரயோகம்!

! சமத்துவபுரங்களால் சாதி ஆதிக்க உணர்வுகள் மடியாது என்பதை! அது முதலில் அரசியலில் ஆதிக்கம் செலுத்துவது நீங்க வேண்டும். அதற்கு அப்புறம் படிப் படியாக இதர துறைகளில்.

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ''தினகரன் என்ன சாதித்து விட்டார் என்று அவரது பெயரை ஒரு முக்கியச் சாலைக்குச் சூட்டுகிறார்கள்? மீறி சூட்டினால் தார் பூசி அழிப்போம்'' என்று இராம. கோபாலன் ஆவேசப்பட்டுள்ளாரே?

! அந்தப் பெயர் சூட்டலில் அரசியல் உள்நோக்கம் இருப்பதாகக் கருதி அதைச் சுட்டிக்காட்டினால் நாகரிகம். இப்படித் தனிப்பட்ட முறையில் தாக்குவது அநாகரிகம். முன்னது ஜனநாயக உரிமை! பின்னது உரிமையின் துஷ்பிரயோகம்.

● மீனாட்சி சந்தரம், திருவண்ணாமலை

? சோ, தி.மு.க.வையும் எதிர்க்கிறார், கலைஞர் பேத்தி மணவிழாவுக்கும் போகிறார்... புரியலையே?!

! அழைப்பு வந்ததால் போகிறார். விமர்சனம் வேறு; நட்பு வேறு என்கிற தெளிவு இருவருக்கும் இருக்கிறது. உங்களுக்கு...?

★ ரூ. 75/- பரிசு பெறுபவர் :

எம்.மிக்கேல்ராஜ்,
சாத்தூர்



★ 'தனி' விளக்கம்!

நீங்கள் கேட்டவை

கிங்க'' என்று அவர் சொன்னதும், எனக்கு வானத்தில் பறப்பது போன்று இருந்தது. என்னால் நம் பவே முடியவில்லை. என்னை வேலூர் கிளைக்கு மாற்றியிருந்தார் கள். நினைக்க, நினைக்க இனித்தது.

**வே**லூர் என்றதும் என் நினைவில் வந்து நின்ற

# மனைவி!



முதல் ஆள் முரளிதான். முதல் வகுப்பிலிருந்து கல்லூரி வரை என் னோடு ஒன்றாகப் படித்தவன். கல்லூரிப் படிப்பு முடிந்ததும் பட்டம் வாங்கிய கையோடு காட்பாடி யிலுள்ள தனியார் நிறு வனம் ஒன்றில் வேலைக் குச் சேர்ந்தவன், படிப்படி யாக முன்னேறி, இன்று ஓர் அதிகாரியாக இருக் கிறான். நானோ ஆயுள் காப்பீட்டுப் பணியில் சேர்ந்து, வெயில், பனி என்று பாராமல் ஊர் ஊராய் அலைந்து கொண்டிருக்கிறேன்.

நான் பூனாவில் இருந்தவரை முரளி யிடமிருந்து தொடர்ந்து கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. நான் டெல்லிக்கு வந்ததி

## டூரிஸ்ட் ஸ்பாட்

**புதுமண்டபம்:**

மீனாட்சி கோயிலை விட்டு வெளியே வந்ததும் அம்மன் சன்னிதி வாசல் அருகே 'புதுமண்டபம்' இருக்கிறது. திருமலைநாயக்கரால் உருவாக்கப்பட்ட மண்டபம். 333 அடி நீளம், 105 அடி அகலம் 25 அடி உயரம் உள்ள இந்த மண்டபத்தில் 124 தூண்கள், நான்கு வரிசையில் அமைந்துள்ளன. மண்டப நடுவில் நாயக்க மன்னர்கள் பதினான்கு பேரின் உருவச் சிலைகள் அமைந்துள்ளன.

அழகிய சிற்பங்களின் இருப்பிடமான இந்த இடத்தில் புத்தகக் கடைகளும், வளையல் அலங்காரப் பொருட்கள் விற்கும் கடைகளும், பாத்திரக் கடைகளும்,

லிருந்து அவனிடமிருந்து கடிதப் போக்கு வரத்து அறவே நின்று போனது. அடிக்கடி என் முகவரி மாறிக் கொண்டிருந்தால் அவன் என்ன செய்வான்?

இறுதியாக அவனிடமிருந்து வந்த அவனுடைய திருமண அழைப்பிதழுக்கு, நான் வாழ்த்துத் தந்தி அனுப்பியதோடு சரி. பல வருட இடைவெளிக்குப் பிறகு அவனைப் பார்க்கப் போகிறேன். அது மட்டுமா? என்னைப் போல் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் ஒண்டிக்கட்டையாய் காலம் தள்ளிக் கொண்டு இருக்காமல், காலாகாலத்தில் ஒரு நல்ல பெண்ணைக் கட்டிக்கொண்டு சந்தோஷமாகக் குடும்பம் நடத்திக் கொண்டிருக்கிறான்.

**இவள்தான் முரளியின் மனைவியா தங்க விக்கிரகம் போல இருக்கிறாளே?**



வேலூர் அண்ணாநகரில் உள்ள என் வீட்டை அடைந்தபோது அனைவரும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

அடுத்த நாள் காலையில் காந்தி நகரில் இருந்த என் புதிய அலுவலகத்துக்குச் சென்று கிளை நிர்வாகியைச் சந்தித்து என் மாற்றல் கடிதத்தைக் கொடுத்தேன்.

''ஓ... நீங்கதான் மதிவாணனா? நல்வரவு...'' என வாயெல்லாம் பல்லாக வரவேற்றார்.

இதற்கு முன் நான் பணியாற்றிய இடங்களைப் பற்றிக் கதை கதையாகப் பேசி, அன்றைய தினத்தை ஒருவழியாக ஓட்டி விட்டேன்.

மாலையில் அவசரம் அவசரமாய் வீட்டை அடைந்து தயாராகி, அன்பளிப்புப் பெட்டியோடு குடியாத்தம் பேருந்தில் ஏறி அமர்ந்தேன். முரளிக்குச் சொந்த ஊர் குடியாத்தம்.

குடியாத்தத்தை அடைந்தபோது மெல்ல இருட்டத் தொடங்கியிருந்தது. ஆட்டோ ஒன்றைப் பிடித்து நெல்லூர்ப் பேட்டைக்குத் துரத்தினேன்.

**கோயில்களுக்குத் தேவையான மணி முடி, ஆடை போன்றவையும், தேரில் தொங்கும் தொம்பை, கட்சி மாநாடு களுக்குத் தேவைப்படும் 'பாட்ச்' வகை களும், பிற கைவினைப் பொருட்களும் கடைவிரிக்கப்பட்டுள்ளன. இங்கு கிடைக்காத பொருட்களே இல்லை. புது மண்டபத்தையும், அதனுள் அமைந்த சிற்ப அழகையும் கண்டு, பின் வேண் டிய பொருட்களை வாங்கியும் இன்ப முறலாம்.**

**- இரா.கல்யாணசுந்தரம், மதுரை**

அமைதியான தெருவில் கடைசியாக இருந்தது முரளியின் வீடு. இந்நேரம் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பி யிருப்பான். யோசனையுடன் அழைப்பு மணியை அழுத்தினேன்.

சில வினாடி இடைவெளிக்குப் பிறகு கதவு திறந்தது.

அசந்துபோனேன்.

இவள்... இவள்தான் முரளியின் மனை வியா? தங்க விக்கிரகம் போல் இருந்த வளைக் கண்கொட்டாமல் பார்த்தேன்.

''நீங்க...?''

''மு...முரளி இல்லையா?'' - அவளின் அபரிமிதமான அழகு என்னைத் தடுமாற வைத்தது.

''அவர் இன்னும் வரலியே...''

''நான் மதி... அவனோட நண்பன்...''

''அடடா... நீங்கதான் மதிவாணனா? வாங்க, வாங்க...'' கதவை அகலத் திறந்து என்னை அவள் வரவேற்பாள் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

உள்ளே சென்று நாற்காலியில் அமர்ந் தேன்.

''அவர் எப்போதும் உங்களைப் பத்தித் தான் பேசிக்கிட்டிருப்பார்.''

''அப்படியா...?'' என்றேன்.

அவள் காஃபி கலந்துகொடுத்தாள். வீடு அமைதியாக இருந்தது.

''வீட்டில் யாருமில்லையா?'' என்று கேட்டேன்.

''என் மாமனாரும், மாமியாரும் அவங்க மூத்த பொண்ணு வீட்டுக்குப் போயிருக் காங்க. அவர் இப்ப வர்ற நேரம்தான்.''

அவள் என்னுடன்



கலகலப்பாகப் பேசினாள். முரளிக்கு ஏற்ற சரியான ஜோடிதான்.

நேரம் 'மளமள'வென ஓடியதே தவிர முரளி வருவதாகத் தெரியவில்லை.

இனியும் காத்திருப்பது சரியில்லை யெனத் தோன்றவே, அன்பளிப்புப் பெட் டியை அவளிடம் கொடுத்துவிட்டு விடை பெற்றேன்.

அந்த இருட்டான சந்திலிருந்து நடந்து வந்து பிரதான சாலையில் ஆட்டோ பிடித்து பேருந்து நிலையத்தை அடைந்தேன். வேலூரிலிருந்து வந்து நின்ற பேருந்தி லிருந்து இறங்கி வந்துகொண்டிருந்தான் முரளி.

ஓடிப் போய் அவன் கையைப் பற்றி, ''ஏய்... முரளி...!'' என்றேன்.

'சட்'டென நிமிர்ந்து என்னைப் பார்த்த



# தாய்

ஞானகுரு

**நேற்று நான் புதைத்துவிட்டேன்**
**அவன் குறித்த**
**கனவொன்றை.**
**பார்க்காமலிருந்தால்**
**காய்ச்சல் வந்தது போய்**
**இப்போதெல்லாம் என்னைப்**
**பார்த்தால் காய்ச்சல் வருகிறதவனுக்கு.**
**நான் அழைத்தால் மட்டும்**
**நாட் ரீச்சபலாகிறது**
**அவனது அலைபேசி.**
**தாரம் வந்த பின்பு**
**மகன்களுக்கு**
**வீண் அவதாரமாகிவிடுகிறாள் தாய்.**
**கவலையெல்லாம்**
**நாளை அவன் மகன்**
**நிராகரிக்காமலிருக்க வேண்டும்**
**அவனை!**

வன், முகத்தைத் தாழ்த்திக் கொண்டான்.

அடப்பாவி!

''டேய்.. நான் மதிடா. உன்னோட நண்பன்டா...'' - அவனைப் பிடித்து உலுக்கினேன்.

''தெரியும்...'' - எவ்வித சலனமுமின்றிச் சொன்னான்.

என்ன ஆயிற்று இவனுக்கு? ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறான்? ஒருவேளை இவனுக்கும், இவன் மனைவிக்கும் இடையே...? இல்லை. அலுவலகப் பிரச்னையாக இருக்கலாம். ஆனால், அதற்காக ஐந்து வருடங்கள் கழித்து ஆசையோடு பார்க்க வந்த நண்பனை இப்படியா தவிர்ப்பது? அவனைத் 'தரதர'வென இழுத்துக் கொண்டு அருகில் இருந்த குளிர் பானக் கடைக்குள் நுழைந்தேன்.

அவனை உட்காரவைத்து நானும் அமர்ந்தேன்.

''இப்ப சொல்லுடா. என்னடா பிரச்னை?''

''நான் எந்த அளவுக்கு எதிர்பார்த்தேனோ, அதைவிட அதிக அழகும், அறிவும் படைத்த மனைவியை ஆண்டவன் எனக்குக் கொடுத்தான்டா.'' நான் பேசாமல் அவனையே வெறிக்க, அவன் தொடர்ந்தான்:

''ஆறு மாசத்துக்கு முந்தி அவளை பிரசவத்துக்காக மருத்துவ மனையில் சேர்த்தேன்டா...''

'குபுக்'கென்று அவன் கண்களில் நீர் திரண்டது.

''டேய், முரளி... சொல்லுடா, என்னடா ஆச்சு...?''

''என் பெண்டாட்டி என்னை விட்டுப் போயிட்டாடா...!''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''நீ... நீ... என்னடா சொல்றே?''

''நான் என்னடா பாவம் செஞ்சேன்? யாருக்கு என்ன கெடுதல் செஞ்சேன்? எனக்கு இவ்வளவு பெரிய தண்டனையை ஏன் கொடுத்தான்?'' - பொது இடம் என்று கூடப் பார்க்காமல் முகத்தை மூடிக்கொண்டு 'ஓ...'வெனக் கதறி அழ ஆரம்பித்தான் முரளி.

ஏனோ தெரியவில்லை. இப்போது ஸ்ரீவாஸ்தவா என் எதிரில் தோன்றி பேய்த்தனமாகச் சிரிப்பதுபோல் இருந்தது. ●

# நீங்கள் கேட்டவை

# தராசு

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

? **''தனியாகக் கட்சி நடத்த முடியாமல் தான் தி.மு.க.வில் இணைகிறோம். இதில் வெட்கப்பட எதுவுமில்லை'' என்கிறாரே எல்.கணேசன்?**

! அரசியலில் இன்று யாருக்குத் தான் வெட்கம் - மானம் இருக்கிறது? இருப்பதெல்லாம் பணத்தாசையும் பதவிப் பித்தும் மட்டும்தான். அந்த அளவில் கணேசன் 'எல்'போர்டு கணேசன் அல்ல!

* ...வியாபாரமும்!

# ஆளப் போவது யாரு?



* வாய்ப்பும்...

● **பி.என்.ஜெய்குமார், திருவாரூர்**

? **''கலைஞரின் உடல்நிலை பற்றி விசாரிக்க வேண்டும் என்ற பண்பு தெரியாத வைகோவை வரலாறு மன்னிக்காது'' என்று பொன்முடி பொருமுகிறாரே?**

! சிறைக்குப் போய்ப் பார்த்த கலைஞர் - ஹாஸ்பிடல் போகாத வைகோ- இதில் பண்பைப் பறிகொடுத்தவர் வைகோதான். ஆனால், எஸ்.வி.சேகர் மாதிரி எதிர்த்துக் கொண்டு விழிக்க முடியுமா என்ன?

● **மஞ்சு வாசுதேவன், நவி மும்பை**

? **ஏவி.எம்.சரவணனிடம் கற்றுக் கொள்ள வேண்டியது?**

! விவேகானந்தர் பாணியில் உறுதி குலையாமல் கைகட்டி நிற்க முடிகிறவர்கள்தான் அடுத்தவர்களைக் கை கட்ட வைக்க முடியும். பணிவு - அடுத்தவர்களைப் பணிய வைக்கும்.



* விவேகானந்தர் வழியில்...

தமிழகம்தான் குடிப்பதில் முதலிடம் வகிக்கிறது என காடுவெட்டி குரு கூறியுள்ளது பற்றி...?

! ஆச்சர்யமில்லை; அரசு சௌகரியம் பண்ணித் தருகிறது; குடிப்பதைப் பொழுதுபோக்காகவும் ஹீரோ லட்சணமாகவும் காமெடியாவும் காட்டி தமிழ் சினிமா ஊக்குவிக்கிறது. வேறு என்ன வேண்டும்?!

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

? அடுத்து இந்தியாவை ஆளப் போவது யார்?

! ஏன், மக்கள்தான்! அது நினைவில் இருந்தால் அவர்கள் கட்சி மாயையிலும் பணத்தாசையிலும் சிக்காமல், வேட்பாளர்களுள் நல்லவர் யாரோ, அவருக்கு வாக்களிப்பார்கள். வலுவான அரசு, தன்னால் அமையும்.

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்★

? தற்போதுள்ள சூழ்நிலையில் கலைஞருக்குத் தீவிர அரசியல் தேவையா? ஓய்வு தேவையா?

! ஓய்வு என்பது உள்ளத்தையொட்டிய விஷயம். கருணாநிதிக்கு அரசியல்தான் டானிக். தற்போதைய சூழ்நிலை என்ன, எந்தச் சூழ்நிலையிலும் அவர் அரசியலை விடமாட்டார். அவருக்கு அதுதான் தேவை. உங்களுக்குக் கருணாநிதி தேவையா என்பது வேறு விஷயம்!

● ஆர்.ராஜதுரை, சீர்காழி

? இந்தியாவிலேயே

● பி.என்.ஜெய்சங்கர், திருவாரூர்

? பிறந்து நான்கு நாட்களே ஆன பச்சிளம் குழந்தையைக் கிணற்றில் வீசி படுகொலை செய்த இன்ஜினியர் தந்தையின் வெறிச் செயல் குறித்து?

! ஒரு தந்தையின் கோபம் என்பதைவிட மனநலம் பாதிக்கப்பட்ட ஒருவரின் குரூரம் என்றே தோன்றுகிறது.



* நட்பின் தெளிவு

● மல்லிகை மன்னன், முடக்கத்தான்

? அடுத்த இந்தியப் பெண் பிரதமர் ஜெ.வா? மாயாவதியா? யாருக்கு வாய்ப்புகள் அதிகம்?

! தேர்தலுக்குப் பிறகு நடக்கப் போகிற குதிரை வியாபாரத்தில் யார் கை ஓங்குகிறது என்பதைப் பொறுத்து.

* குழப்பும் குற்றச்சாட்டு!



❑ ரூ.150/-பரிசு பெறுபவர் :

பா.இசக்கிமுத்து,
வெள்ளானைக் கோட்டை

நீங்கள் கேட்டவை


★ அரசியல் டானிக்!

● சி.இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி

? ''உலகில் இதுவரை எந்தப் போர் நிறுத்தத்திலும் இரு தரப்பில் ஒரு தரப்பினர் ஆயுதங்களைக் கீழே போட வேண்டுமென்று, இந்தியாவைத் தவிர வேறு எவரும் சொன்னதில்லை!'' என்கிறாரே வைகோ?

! இரண்டு தேசங்களுக்கிடையில் நடக்கும் போர் என்பது வேறு; பிரிவினைவாதத்துடன் கூடிய உள்நாட்டு பயங்கரவாதத் தாக்குதல் என்பது வேறு. இந்திய அரசின் நிலைப்பாடு சரியானது. இதில் வைகோவுக்குக் குழப்பம் இல்லை. மக்களைக் குழப்புவது மட்டுமே அவர் நோக்கம்.

● பா.இசக்கிமுத்து, வெள்ளாணைக் கோட்டை

? சமத்துவபுரங்களை உருவாக்கிய கலைஞர் ஆட்சியில், கிராமங் களில் உள்ள சுடுகாட்டு தகனமேடை கல் வெட்டில் 'தேவர் மயா னம்', 'ஆதி திராவிடர் மயானம்' என்று எழுதப் பட்டு வருவது எதைக் காட்டுகிறது?


★ உரிமையின் துஷ்பிரயோகம்!

! சமத்துவபுரங்களால் சாதி ஆதிக்க உணர்வுகள் மடியாது என்பதை! அது முதலில் அரசியலில் ஆதிக்கம் செலுத்துவது நீங்க வேண்டும். அதற்கு அப்புறம் படிப் படியாக இதர துறைகளில்.

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ''தினகரன் என்ன சாதித்து விட்டார் என்று அவரது பெயரை ஒரு முக்கியச் சாலைக்குச் சூட்டுகிறார்கள்? மீறி சூட்டினால் தார் பூசி அழிப்போம்'' என்று இராம. கோபாலன் ஆவே சப்பட்டுள்ளாரே?

! அந்தப் பெயர் சூட் டலில் அரசியல் உள்நோக்கம் இருப்பதாகக் கருதி அதைச் சுட்டிக்காட்டினால் நாகரிகம். இப்படித் தனிப்பட்ட முறை யில் தாக்குவது அநாகரிகம். முன்னது ஜனநாயக உரிமை! பின்னது உரிமையின் துஷ் பிரயோகம்.

● மீனாட்சி சுந்தரம், திருவண்ணாமலை

? சோ, தி.மு.க.வையும் எதிர்க்கிறார், கலைஞர் பேத்தி மணவிழாவுக்கும் போகிறார்... புரியலையே?!

! அழைப்பு வந்ததால் போகிறார். விமர்சனம் வேறு; நட்பு வேறு என்கிற தெளிவு இருவருக்கும் இருக்கிறது. உங்களுக்கு...?

★ ரூ. 75/- பரிசு பெறுபவர் :

எம்.மிக்கேல்ராஜ்,
சாத்தூர்


★ 'தனி' விளக்கம்!

# மயக்கும்




**தூ**ங்கா நகரம், விழா நகரம், மதுரை மூதூர், ஆலவாய், கூடல் மாநகர், ஜெயந்திபுரம், சுயராஜ்யபுரம், அகிம்சாபுரம்... இப்படி எத்தனை பெயரில் கூப்பிட்டாலும் எங்க மதுரை மதுரைதான். எங்க ஊரு மக்கள் மொழியில் சொல்லணும்னா மருத மருததான்.

அப்படி என்ன பெருமைன்னு கேட்கிறீங்களா? 2000 வருஷத்துக்கு முந்தி புலவர்கள் எழுதின சங்க இலக்கிய நூல்களில் எங்க ஊரு பேரு இருக்கு. 'மதுரைக் காஞ்சி' இந்தப் பெயரிலேயே மாங்குடிமருதனார் என்ற புலவர் 782 வரிகள்ல மதுரையைத் தெருத் தெருவா சுத்திக் காண்பிச்சிருக்காரு. அன்னைக்கே எங்க ஊர்ல 'அல்லங்காடிகள்' இருந்திருக்கு. அதுதாங்க புரியலையா? 'ஈவினிங் ஷாப்' மதுர வீதிகள் எத்தனை அகலமா இருந்தன தெரியுமா?

''ஆறுகிடந்தன்ன அகல நெடுந் தெருக்கள்.'' வைகை ஆத்தப் போலவே வீதிகள் பரந்து விரிந்து கிடந்தன. தங்க நாற்கரச் சாலையை இப்பத்தான் யோசிச்சிருக்கோம். தமிழ்நாட்டில எந்த ஊரை எடுத்துக்கிட்டாலும் கடவுள் வந்தார், நடந்தார், இது கடவுள் இருந்த மண்ணு, நடந்த மண்ணு அப்படின்னு பெருமையாப் பேசுவாங்க. எங்க மதுர மண்ணு எப்படிப்பட்டதுன்னு தெரியுமா? சொக்கநாதப் பெருமான் நடந்த மண்ணு மட்டுமில்ல. தலையில சுமந்த மண்ணுங்கூட. அது மட்டுமில்ல. அப்படி மண் சுமந்த ஈசனையே பெரம்பாலடித்து புண் சுமக்க வைத்தவர்கள்.


* எம்.எஸ்.

* கு.ஞானசம்பந்தன்


''மண்சுமந்து
கூலிகொண்டு
அக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்து பொன்மேனி
பாடுதும் காண் அம்மானாய்''

இன்னைக்குத் தமிழ்மொழி செம்மொழி ஆனதுல நமக்கெல்லாம் பெருமைதான். இந்தச் செம்மொழியை சங்கம் வைத்து, தமிழ்ச் சங்கம் வைத்து, முச்சங்கம் வைத்துக் காப்பாற்றியது இம் மதுரை மண்தான்.

''மா பாரதப் போர் முடித்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்''

என இன்றும் கூறுவது வழக்கம்.

தாமரை மலரும் அதனோட இதழ்களும் விரிச்சு வச்சுப் பார்த்தா அழகா இருக்கும். இது அப்படியே மதுரக் கோயிலுக்கும் வீதிகளுக்குமா, ஒப்பும காட்டுறாரு பரிபாடல் என்ற நூலில் ஒரு புலவர். முருகனோட அறுபடை வீட்டில் மூணு படைவீடு எங்க மதுரையைச் சுத்தித்தான் இருக்கு. திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலை, திருஆவினன்குடியாகிய பழனி (இப்ப திண்டுக்கல் மாவட்டம்).

உலகத்துல தூங்காத நகரமே வேற இல்லையா? லண்டன், பாரிஸ், நியூயார்க் இந்த



# மதுரை!

**கு. ஞானசம்பந்தன்**

நகரமெல்லாம் தூங்காத நகரம்தானே அப்படின்னு நீங்க கேட்கலாம். உண்மைதான். ஆனா அவங்க ஏன் தூங்கலை? விடிய விடிய குடிச்சிட்டு கண் விழிச்சு சீட்டு ஆடிட்டு காலம்பற வீட்டுக்குப் போறாங்க. அப்படி நகரமில்ல மதுர! ஒரு பக்கம் நாடகம், இந்தப் பக்கம் கரகாட்டம், அந்தப் பக்கம் லாவணி, இருக்கவே இருக்கு எங்க பட்டிமன்றம். மதுர அன்னைக்கும் இன்னைக்கும் கலைகளால் தூங்காத நகரம்.

எங்க ஊரு வீதிப் பேரு மாதிரி நீங்க எந்த ஊர்லயாவது பார்த்திருக்கீங்களா? மாதப் பெயர்களில் வீதி வேணுமா? சித்திரை வீதி, மாசி வீதி, ஆனி வீதி, ஆடி வீதி, ஆவணி வீதி போதுமா...?

எந்தத் தொழில் எங்க நடக்குதுன்னு வீதிப் பெயரை வச்சே சொல்லிப்புடுவோம் நாங்க. பச்சரிசிக்காரத் தெரு, புழுங்கரிசிக் காரத் தெரு, தென்னவோலக்காரத் தெரு, சித்திரக்கார வீதி, தைக்காரத் தெரு (தையல் காரர்கள் வீதி), சுண்ணாம்புக்காரத் தெரு, வளையல்காரத் தெரு, சாந்துக்காரத் தெரு.

சாதிப் பேருல வீதி இருந்தாலும் சமரசமாத்தான் இருக்கோம். தானப்ப முதலி



யார் அக்கிரகாரம். இங்கிலீஷ் பேரு வச்சாதான் ஒத்துக்கிடு வீங்களா? மாரட்வீதி, கிளாஸ் காரத் தெரு இருக்குங்க!

இந்தப் பிறவியில சாமி கும்பிட்டா மறு பிறவியில நல்லா இருக்கலாம், அது ஒங்க ஊர்ல. எங்க ஊர்ல 'இம் மையில் நன்மை தருவார் கோயில்'. அதாவது உடனுக் குடனே இந்தப் பிறப்பிலேயே நன்மை செய்யற கடவுள் மதுரச் சொக்கநாதர்தான்.

சைவக் கடவுளான சொக்கநாத ரையும் மீனாட்சியையும் மட்டும்தான் நாங்க கும்பிடுவோம்னு நினைக்காதீங்க. வைணவக் கடவுளான கள்ளழகர் வருஷந் தோறும் மதுரைக்கு வருவாரு. ஓடிப் போய் கும்பிடுவோம். கோரிப்பாளையம் தர்காவிலும், தெற்கு வாசல் பள்ளிவாசலிலும் குழந்தைக்கு மந்திரிக்கப் போவோம். மதுரைப்புதூர் மாதா கோயிலும், ஜடாமுனி கோயில் தெரு சமணக் கோயிலும், கிடாவெட்டுக்குப் பெயர் போன பாண்டிமுனியும் (பாண்டி கோயில்) எங்களுக் குக் கண்கண்ட தெய்வங்கள்தான்.

எல்லாஞ்சரி. இப்ப மதுரைக்கு என்ன பெருமை? என்று நீங்கள் கேட்பது புரிகிறது.

★ நான்காம் தமிழ்ச் சங்கத்தை பாண்டித் துரைத்தேவர் உருவாக்க அது செந்தமிழ்க் கல்லூரியாக சீரோடு விளங்குகிறது.

★ மகாகவி பாரதியின் 'தனிமை இரக்கம்' என்ற முதல் கவிதை 'விவேக பானு' என்ற இதழில் அச்சில் வெளிவந்தது இங்கேதான்.

★ தமிழ்த் திரையுலக வரலாற்றில் 1931-இல் பேசும் படமாக வெளிவந்த 'காளிதாஸ்' படத் துக்குப் பாடல் எழுதிய 'மதுரகவி பாஸ்கர தாஸ்' மதுரையைச் சேர்ந்தவர்தான்.

★ கானக்குயில். 'எம்.எஸ். சுப்புலெட்சுமி', 'மதுரை சண்முக வடிவு சுப்புலெட்சுமி' - மறக்க வேண்டாம்.

★ சுதந்திரப் போராட்டக் காலத்தில் காந்தி யடிகள் அரையாடை அணிந்தது மதுரை மண்ணில்தான்.

★ இந்தியாவிலேயே தாழ்த்தப் பட்ட ஒடுக்கப்பட்ட மக்களை கோயி லுக்குள் அழைத்துச் சென்று 'அரிசன ஆலயப் பிரவேசம்' செய்வித்தது இங்கேதான்.

★ உலக அழகி ஐஸ்வர்யாராய் கூட திருமலைநாயக்கர் மஹால் பின்னணி யில் ஆடும்போதுதான் 'பிரபஞ்ச



அழகி'யாகத் தோன்றுகிறார் (மணி ரத்னம் படங்கள்)

★ நகைச்சுவையால் திக்குகளை அதிரவைக்கும் வைகைப் புயலும், சின்னக் கலைவாணரும் இம்மண்ணின் மைந்தர்கள்தாம்.

★ சமீபத்தில் கோடம்பாக்கத்தில் பேச்சே ''மதுரை லொக்கேஷனா படம் ஜெயிச்சிரும்.'' பருத்தி வீரன், சுப்ர மணியபுரம் அடுத்து வருவது 'ஆடு களம்'. இதுக்கு மேல என்ன சொல்ல? மதுர மதுரதான்! ●

# டிப்டாப் ஜீன்ஸ்!

## உடையழகு... நடையழகு...

உலகிலேயே ஒரே உடையை வீட்டுக்கு, ஆபீசுக்கு, பார்ட்டிக்கு, சினிமாவுக்கு, பிக்னிக்குக்கு... எனப் போட முடியுமானால் அது ஜீன்ஸ் மட்டுமே! துவைக்காமல் மாதக்கணக்காகப் போடப்படும் ஜீன்ஸ் பான்ட், இளைஞர்கள் மற்றும் கல்லூரி மாணவ மாணவிகளின் தோஸ்த்.

ஜீன்ஸ் பான்டில் கட் மிகவும் முக்கியம். பூட்கட், ஸ்ட்ரெயிட் கட் தற்சமயம் பாப்புலர். எப்படி வாங்குவது எனத் திண்டாடும் பெண்களுக்குச் சில யோசனைகள்...

★ முதலில் பட்ஜெட்டை முடிவு செய்யுங்கள். பிராண்டட் ஜீன்ஸ் என்றால் விலை அதிகம். டிஸைனர் ஜீன்ஸ் கண்டிப்பாக வார்ட்ரோபில் இடம்பெற வேண்டிய அயிட்டம்தான். இருந்தாலும் ஸேல் அல்லது தள்ளுபடி சீஸனில் வாங்குவது நல்லது.

★ கண்டிப்பாகப் போட்டுப் பார்த்து வாங்கவும். பலவித சைஸ்களில் வரும் ஜீன்ஸ் பான்டை லேபிள், அளவு பார்த்து அவசர அவசரமாக பாக் செய்து ஓடாமல் பொறுமையாக நிதானமாக வாங்கவும்.

★ புது ஜீன்ஸ் பான்டைப் போட்டு நடந்து, குனிந்து பார்க்கவும். கம்ஃபர்டபிளாக இருக்கிறதா என செக் பண்ணவும்.

★ ஜீன்ஸ் பான்டின் டிஸைன் மிக முக்கியம். ப்ளெயினா, ரிப்டா (கிழிந்தது), எம்பிராய்டரியா, பாட்ச் வைத்ததா, கிறிஸ்டல் வாலாவா... என ஆராய்ந்து, பிடித்ததைப் போட்டுப் பார்த்து வாங்கவும்.

ஜீன்ஸ் பான்ட் போட்டுக்கொண்டு தன்னை மாடர்ன் அல்ட்ரா என அலட்டும் பெண்களுக்கு மட்டும் ஒரு நியூஸ். ஜீன்ஸ் பதினெட்டாம் நூற்றாண்டிலேயே அறிமுகமான ஆடை! இனி ஜீன்ஸைப் பற்றிய

சில சுவாரஸ்யமான தகவல்களைப் பார்ப்போமா?

★ ப்ளூ ஜீன்ஸ் பான்டிற்குக் கூட ஹேப்பி பர்த்டே உண்டு. ஒவ்வொரு வருடமும் மே 20ம் தேதி ஜீன்ஸுக்கு 'புட்டின ரோஜு' (பர்த்டே).

★ உலகில் கோகோ கோலாவுக்கு எவ்வளவு விசிறிகளோ, அதற்குக் கொஞ்சமும் குறையாமல் போட்டியிலிருப்பது ஜீன்ஸ்! வாயில் கோக்; இடுப்பில் ஜீன்ஸ்.

★ ஒவ்வொரு அமெரிக்கப் பெண்ணிடமும் குறைந்தது எட்டு ஜீன்ஸ் பான்ட்ஸ் இருக்கும்.

★ ஜீன்ஸ் பான்டின் முழு விலையில் வெறும் 12 சதவிகிதமே தயாரிப்பாளருக்குப் போய்ச் சேருகிறது. மற்றவை எல்லாம் விற்பனையாளர்களுக்கே! கொள்ளை லாபம் கொடுக்கும் காமதேனு.

★ முதன்முதலாக ஜீன்ஸ் அணிந்த பெண்ணின் புகைப்படம் பிரபல 'வோக்' பத்திரிகையில் 1835ல் வெளிவந்தது.

★ 50 மற்றும் 60களில் பள்ளிக்கூடங்களுக்கு ஜீன்ஸ் அணிந்து வரக் கூடாது என பல பள்ளி நிர்வாகங்கள் ஜீன்ஸைப் புறக்கணித்து விட்டன. ஜீன்ஸ் அணிந்தால் மாணவர்கள் புரட்சியாளர்களாகத் தெரிகிறார்களாம்.

★ ஜீன்ஸைக் கண்டுபிடித்தவர் சான்ஃபிரான் ஸிஸ்கோவைச் சேர்ந்த லீவாய் ஸ்ட்ராஸ். இன்றும் உலகிலேயே மிகப் பெரிய ஜீன்ஸ் உற்பத்தி செய்யும் கம்பெனி லீவாய் ஜீன்ஸ்!



★ 1848ல் கலிஃபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டு, தங்கச் சுரங்கத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு முரட்டு உடை தேவைப்பட்டது. லேசில் கிழியாத ஸ்ட்ராங்கான பான்ட் வேண்டுமென்றதற்குச் செவி சாய்த்தது லீவாய் ஸ்ட்ராஸ் மற்றும் ஜேக்கப் டேவிஸ்.

★ சுரங்கத் தொழிலாளிகளின் பான்ட் பாக்கெட் அடிக்கடி கிழிந்து போக ரிவிட் அடித்து இணைக்கும் யுக்தியைக் கண்டுபிடித்து ஹிட்டாக்கி உரிமைப் பத்திரமும் பெற்றது லீவாய்-ஜேக்கப் ஜோடி.

★ ஜீன்ஸ் பான்ட் ஜிப்பில் அதிகமாக காணப்படும் வார்த்தை YKK. இதன் விரிவாக்கம் 'யோஷிதா கோக்யோ காபுஷிக்கிட கைஷா'. அதாவது யோஷிதா கம்பெனி லிமிடெட் என்று பொருள். இந்த ஜப்பானிய கம்பெனி 1934ல் ஆரம்பிக்கப்பட்டது. இன்றும் தொடருகிறது.

★ ஜீன்ஸ் பான்டிற்கு முதலில் 'வெயிஸ்ட் ஓவர் ஆல்' (விண்வெளி வீரர்கள் போடுவது போல சட்டை + பான்ட்) எனப் பெயர். 1890-ல் '501' என்ற புகழ்பெற்ற நம்பரை லீவாய்ஸ் தன்னுடைய பிராண்ட் ஆக்கியது.

★ ஈபே ஆன்லைன் விற்பனையின் மூலம் ஜப்பானியர் ஒருவர் 60,000 டாலர் கொடுத்து ஜீன்ஸ் வாங்கியதுதான் இன்று வரை எக்ஸ்பென்ஸிவ் ஜீன்ஸ் பர்ச்சேஸ்!

- லதா சேகர்

● **கோமதி, நெல்லை**

**"Black and White" விழியால் எப்படி Colourful காட்சிகளைக் காண முடிகிறது...?**

''அண்ணாந்து பார்க்க ஆரும் இல்லா விட்டால், ஆகாசம் எதற்கு அனாவசியமாக நீலநிறத்தில் இருக்க வேண்டும்?'' என்று அன்றே கேட்டார் அத்வைத ஆதிசங்கரர். நாம் பார்ப்பது எல்லாமே "Black and White" த்வைதம்தான்... Colour பூசும் ஓவியன் மூளை. ஆக வண்ணம் என்பதும் ஒரு எண் ணம். பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள், பார்வை இவை மூன்றும் ஒன்றானால் ''காக்கைச் சிறகினில் கண்ணனைக் காணலாம்.''

● **ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி**

**ஒரு மனிதன் பூரணம் அடைவது எப்போது...?**

கொழுக்கட்டைக்குள் இருப்பது சுவை யான பூரணம். அதே போல நமது கொழுப் புக் கட்டைக்குள் எங்கும் நீக்கமற நிறைந் திருக்கும் பரி-பூரணத்தின் ஒரு பகுதி Some பூரணமாக இருக்கிறது... அந்த Some பூரணம் பிறந்த காரணம் உணர்ந்தால் வாழ்க்கையில் No ரணம்.

● **அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்**

**சூரபத்மனை வெல்வதற்கு முன்பு முருகனின் வாகனம் எது...?**

முருகனுக்கு என்றும் வாகனம் முத்தமிழ்.



''கோட்டை அறையை...'' மனைவி யாக்கி உங்கள் கோட்டை யாம் படுக்கை அறையை.

● **என். சண்முகம், திருவண்ணாமலை**

**பூனைக்கு மணி கட்ட லாம்... புலிக்கு...?**

புலிக்குக் கட்டப் போனால், அது உங்களுக்கு நீங்களே கட்டிக்கொள்ளும் சாவு மணி.

● **பி.முத்துலெட்சுமி, ஸ்ரீரங்கம்.**

**கூட்டுக் குடும்பம் நல்லதா, தனிக் குடித்தனம் நல்லதா...?**

இப்பொழுது இருக்கும் காலகட்டத்தில் கணவனும் மனைவியும் சேர்ந்து இருப் பதே கூட்டுக் குடும்பம் என்றாகிவிட்டது. கணவன் ஒரு ஊரிலும், மனைவி வேறு ஊரிலும் வேலை நிமித்தம் தனித்தனியாக வாழ்வது தனிக்குடித்தனம் என்றாகி விட்டது.

● **கிருஷ்ண ராஜ்கோபால், சென்னை**

**ஒபாமா ஒஸாமாவைப் பிடிப்பாரா...?**

நல்லா கேட்டீங்க. இப்ப இருக்கற பொருளாதாரப் பின்னடைவுல ஒபாமாவின் பிரச்னை ஒஸாமா இல்லம்மா... அமெரிக்க விஸாம்மா.

● **சுகந்தி, விழுப்புரம்**

**தோல்வியில் வெற்றி காண முடியுமா...?**

முடியும்.. தோல்Veயில் இருக்கும் V for Victory.

# கிறுக்கு என்ன

● **'குலசை' நஜ்முதீன், காயல்பட்டினம்**

**காதலிக்குப் பரிசாக என்ன கொடுக்க லாம்..?**

● ரா.பிரசன்னா, மதுரை

கிளாமருக்கென தனியாக கிராமர் உண்டா...?

உண்டு... அந்த இலக்கணம் கவர்ச்சிக் கலக்கணம்.

● டி. முருகேசன், திருவாரூர்

பெண்களுக்கு அழகு சாந்து பொட்டா? ஸ்டிக்கர் பொட்டா?

சாந்துதான் பொட்டு. ஸ்டிக்கர் ஒட்டு.



தேர்தல் விளம்பரங்களை உருவாக்க விளம்பர ஏஜென்சிகளைப் பயன்படுத்திக் கொள்வது, பத்திரிகையாளர்கள் சந்திப்புகளை ஏற்பாடு செய்ய பி.ஆர். ஏஜென்சிகளை அமர்த்துவது இவற்றுடன், இந்தத் தேர்தலில் காங்கிரஸ் திட்டமிட்டுள்ள இன்னொரு ஐடியா, எந்த நேரத்திலும் மீடியாவுக்கு எந்தத் தகவல் வேண்டுமானாலும் அளிப்பதற்காக ஒரு கால் சென்டர் அமைப்பது. இந்தத் தேர்தலில் மூத்த தலைவரான வாஜ்பாய் உடல்நலம் காரணமாகக் களமிறங்கப் போவதில்லை என்றாலும் கூட, அச்சு மற்றும் எலெக்ட்ரானிக் மீடியா விளம்பரங்களில் வாஜ்பாய், அத்வானி இருவரையுமே முன்னிறுத்தி விளம்பரம் செய்ய

அண்மையில் ஹைதராபாத்தில் நடந்த பிரஜா ராஜ்ஜியம் கட்சிக் கூட்ட மொன்றில் சிரஞ்சீவியின் படங்களுடன் சே குவாராவின் படங்களும் ஏராளமாகக் காணப்பட்டன. அதன் பின்னணி? அந்தக் கூட்டத்தில் சுமார் 2000 முன்னாள் மாவோயிஸ்ட் நக்ஸலைட்கள் அவரது கட்சியில் சேர்ந்தார்கள். 'மக்களாட்சியில் வன்முறைக்கு இடமில்லை; பிரஜா ராஜ்ஜியம் ஆட்சிக்கு வந்தால், மாவோயிஸ்ட்கள் எந்த சமூக நீதிக்காக வன்முறை வழியைக் கடைப்பிடிக்கிறார்களோ, அது ஜனநாயகத்திலேயே கிடைக்கும்' என்று முழங்கினார் சிரஞ்சீவி.

## அக்கம் பக்கம்



எம்.எல்.ஏ. ஆகி மகாராஷ்டிரா சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அண்டர்வேர்ல்ட் தாதா அருண் காவ்லி. அவருடைய கட்சிக்கு அகில பாரதிய சேனா என்று பெயர். தற்போது மும்பை சிறையில் இருக்கும் காவ்லி, திடீரென்று தன் கட்சியை பகுஜன் சமாஜ் கட்சியுடன் இணைக்க முடிவெடுத்துள்ளார். பாராளுமன்றத் தேர்தலில் தென் மத்திய மும்பை பாராளுமன்றத் தொகுதியில், பகுஜன் சமாஜ் கட்சி வேட்பாளராகப் போட்டியிடும் திட்டமும் இருக்கிறது என்று கேள்வி.



முடிவு செய்துள்ளது பா.ஜ.க.

இந்தப் பாராளுமன்றத் தேர்தலைப் பொறுத்தமட்டில் பல்வேறு முடிவுகளையும் எடுக்க சோனியா காந்தி மிகவும் நம்புகிற காங்கிரஸ் தலைவர்களின் பட்டியல் இது : பிரணாப் முகர்ஜி, ஏ.கே. ஆண்டனி, அகமது படேல், திக்விஜய் சிங்.



போன எம்.பி. தேர்தலில் போட்டியிட்டு 40/40 வாங்கிய தமிழக எம்.பி.க்களில் ஒரே ஒருவர் தொகுதி மறுசீரமைப்பு பற்றிக் கவலைப்படாமலிருக்கிறார். அவரது தொகுதியில் பெரிசாய் மாற்றமில்லை. அவர் மணிசங்கர் ஐயர். தொகுதி: மயிலாடுதுறை.

# தோனி, வோட்டுப் போடுவாரா?

அந்த உலகறிந்த பிரபலத்தின் பெயரோ, அவரது அம்மா, அப்பா பெயரோ அவர்கள் வசிக்கும் பகுதிக்குரிய வாக்காளர் பட்டியலில் இல்லை. இந்த நியூஸ், மீடியாவில் ஃப்ளாஷ் ஆகி பரபரப்பானதும், மாநிலத் தலைமைத் தேர்தல் அதிகாரி உடனடியாக நடவடிக்கை எடுத்து, அவர்கள் பெயர்களை வாக்காளர் பட்டியலில் சேர்த்து, கூடவே வாக்காளர் அடையாள அட்டையையும் அனுப்பிவைத்து விட்டார். அந்தப் பிரபலம்: டீம் இந்தியா கிரிக்கெட் கேப்டன் மகேந்திர சிங் தோனி; தொகுதி ராஞ்சி.

- பரத்ராம்

**ம**துரை மல்லியைவிட மதுரை மாவட்ட ஸ்பெஷலுக்கு மணம் அதிகம் தான்!

**- கோமளா ரங்கநாதன், சென்னை - 17**

**ம**.தி.மு.க.வில் குடும்ப ஆதிக்கம் என வைகோவின் மீதான குற்றச்சாட்டுகள் எல்லாம் தி.மு.க.வில் சேர கண்ணப்பன் சொல்லும் அபத்தங்கள்.

**- ஆர்.பி.ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்**




''**கா**வலர்களுக்கு சங்கம் தேவையில்லை'' என்று கூறிய நாஞ்சில் குமரனின் நடுநிலையான பேட்டி வரவேற்கத்தக்கது.

**- எஸ்.உமாதேவி, வேட்டவலம்**

''**கெ**ட்டிவீடு எனக்கு மட்டும்னா வேணாம்... என்னைச் சுத்தியும் எங்காளுங்கதான் இருக்காங்க. அவங்களுக்குக் கட்டித்தரும்போது எனக்கும் கட்டிக் குடுங்க'' என்று சொல்லும் சின்னப்பிள்ளையின் உள்ளம் அற்புதமானது.

**- இராஜேந்திரன், லால்குடி**

**அ**லங்காநல்லூர் ஜனங்களுக்கு ஜல்லிக்கட்டு உணர்வு சார்ந்த விஷயம், அறிவு சார்ந்த விஷயமல்ல என்பது கட்டுரையைப் படிக்கும்போதே தெரிகிறது.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**ம**துரை மாவட்ட ஸ்பெஷல் கல்கி, மதுரை மல்லியாய் மணம் வீசி, மதுரை இட்லியாய் இனிய சுவை தந்தது!

**- வி.என்.கதிர்வேல், வேலூர்-6**

**தே**ர்தல் கள சுத்திகரிப்பு தலையங்கத்தின் ஒவ்வொரு வரியையும் ஒவ்வொரு அரசியல் கட்சியும் வாசித்துத் தங்களை முதலில் சுத்திகரித்துக் கொள்ளட்டும்!

**- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி**

**க**ல்கி(22.3.2009) இதழ் தராசு பதில்களில் ஒபாமாவுக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை என்று குறிப்பிட்டுள்ள பாடலை இயற்றியவர் கண்ணதாசன் அல்ல; வாலி.

**- நர்மதா தேவி, புதுக்கோட்டை**

**க**ருவிலேயே கல்லறை (உசிலம்பட்டி பயங்கரம்) கட்டுரை படித்து அழுதே விட்டேன். கல்கியின் பேட்டி கனமான பேட்டிதான்.

**- அ.முரளிதரன், மதுரை**

**ஸ்ரீ லலிதா - அடுத்த வாரம்**

